# கிறித்தவத் தமிழ்

## நடையியல் நோக்கு

முனைவர் ப. டேவிட் பிரபாகர்



INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

# கிறித்தவத் தமிழ்

## நடையியல் நோக்கு

ப. டேவிட் பிரபாகர்

விரிவுரையாளர், தமிழ்த்துறை

சென்னைக் கிறித்தவக் கல்லூரி

சென்னை - 600 059



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சி.பி.டி. வளாகம், தரமணி

சென்னை - 600 113

கிறித்தவமும் தமிழும் அறக்கட்டளைச் சொற்பொழிவு-6
(29-11-1999)

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Krittuvat tamil<br>nataieyal nokku |
| Author | : | P. David Prabhakar |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai - 600 113. |
| Publication No | : | 421 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | 2002 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 point |
| No. of Pages | : | vii + 89 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.20/- (Rupees Twenty Only) |
| Printing | : | United Bind Graphics<br>189-D, Royapettah High Road<br>Mylapore, Chennai - 600 004 |
| Subject | : | Christian Tamil Stylistic approach |


அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகட்கு நிறுவனம் பொறுப்பல்ல

முனைவர் சா. கிருட்டிணமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## அணிந்துரை

"கிறித்தவமும் தமிழும் அறக்கட்டளை"யின் கீழ் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தொடர்ந்து அறக்கட்டளைச் சொற்பொழிவுகளை நடத்தி வருகின்றது. இது தொடர்பாகக் 'கிறித்தவத் தமிழ் - நடையியல் நோக்கு' என்ற பொழிவுத் தலைப்பில், சென்னைக் கிறித்தவக் கல்லூரியின் தமிழ்த்துறை விரிவுரையாளரான திரு. ப.டேவிட் பிரபாகர் அவர்கள் அக்கல்லூரியில் 29.11.1999 அன்று அறக்கட்டளைச் சொற்பொழிவை நிகழ்த்தினார். சொற்பொழிவின் எழுத்துருவும் ஆசிரியரால் உடன் வழங்கப்பட்டு விட்டது. ஆயினும் பல்வேறு காரணங்களாலும், காலச் சூழலாலும் நூலை உடனடியாக வெளியிட இயலாத நிலை ஏற்பட்டது. தேங்கிக் கிடக்கும் அறக்கட்டளைச் சொற்பொழிவுகளை நூலாக்கி வெளியிடுவதில் முயற்சியும் முனைப்பும் எடுத்துக் கொள்ளப்பட்டு இந்நூல் இப்போது வெளியிடப் பெறுகின்றது.

'கிறித்தவத் தமிழ் - நடையியல் நோக்கு' என்ற தலைப்பில் வெளியிடப்பெறும் முதல்நூல் இது என்பதில் நிறுவனம் பெருமையும், பெருமிதமும் கொள்கிறது. இதுகாறும் கிறித்தவ இலக்கியங்கள், கிறித்தவப் படைப்பாளர்கள், கிறித்தவ அறிஞர்கள் குறித்த ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. விவிலியத்தின் மொழிபெயர்ப்புப் பின்னணி, வரலாறு, மொழிநடைப் பண்புகள் பற்றித் தனிப்பட்ட ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. விவிலிய மொழிநடை ஆய்வுகளும் செய்யப்பட்டுள்ளன. ஆயின், ஒட்டுமொத்தக் கிறித்தவத் தமிழின் நடையியல் போக்கை மட்டும் அடிப்படையாகக் கொண்டு இதுவரை ஆய்வுகள் நடத்தப்பெறவில்லை. அந்த வகையில் இவ் வாய்வை நிகழ்த்தி, வருங்கால மேலாய்வுகளுக்கும், கிறித்தவ மொழி நடைச் சிந்தனைகளுக்கும் வழிகோலியுள்ள திரு. ப.டேவிட் பிரபாகர் அவர்களின் பணி பாராட்டிற்குரியது.

இந்நூல் ஆசிரியர் கிறித்தவத் தமிழின் தோற்றம், வளர்ச்சி குறித்தும், கிறித்தவச் சமயநூல்களின் தோற்றம், மொழிச் சூழல் குறித்தும், தொடக்ககாலக் கிறித்தவப் படைப்புகளின் தன்மை குறித்தும், காலந்தோறும் இவற்றின் மாற்றம், வளர்ச்சி, போக்குகள் குறித்தும் ஆழமான ஆய்வை நிகழ்த்தியுள்ளார்.

தமிழின் செய்யுள், உரைநடை வளர்ச்சி, இலக்கிய வழக்கு, உலக வழக்குகள் தொடர்பான தமிழ் மொழிநடை ஆய்வுகள், கிறித்தவர்களின் தமிழ்ப்பணி மற்றும் சமயப்பணிகள் குறித்த ஆய்வுகளை மேற்கொள்பவர்களுக்கு இந்நூல் மிகுந்த பயன் நல்குவதாக அமையும். மொழிநடை என்பது மக்களின் சமுதாய, சமய, கலை, இலக்கிய, பண்பாடு, பழக்க வழக்கங்களுடன் பின்னிப் பிணைந்துள்ளதாகும். ஆகவே இவை தொடர்பான ஆய்வுகளுக்கும் அடிப்படையான தொடர் ஆய்வுகளுக்கும் வழி வகுக்கக் கூடிய இத்தகு நூலை வெளியிடுவதில் நிறுவனம் பெருமகிழ்வடைகின்றது. இவ்வறக்கட்டளை நிறுவனர் அவர்களுக்கும், அறக்கட்டளை நிகழ்ச்சிப் பொறுப்பாளர் முனைவர் சூ. நிர்மலா தேவி அவர்களுக்கும் நன்றி.

இந்நிறுவனத்தின் வளர்ச்சிக்கு ஊக்கம் தந்து ஆதரவு நல்கிவரும் நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி அமைச்சர் முனைவர் மு. தம்பிதுரை அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி-பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திரு. பி.ஏ.இராமையா இ.ஆ.ப. அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறையின் கூடுதல் செயலர் திரு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இந்நூலிற்கு மெய்ப்புத் திருத்தம் செய்துதவிய முனைவர் சூ. நிர்மலா தேவி அவர்களுக்கும் ஒளி அச்சுக்கோர்வை செய்த கணிப்பொறி உதவியாளர் திரு. சு. கண்ணனுக்கும், நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் நன்றி.

**இயக்குநர்**

# முன்னுரை

சமயக் கருத்தாடல்களில் கிறித்தவர்கள் கையாளும் மொழிப்பாங்கு தனித்தன்மை வாய்ந்தது. இதனைக் 'கிறித்தவத் தமிழ்' என வழங்கக் காண்கிறோம்.

தமிழ் உரைநடை வரலாற்றில் கிறித்தவப் பனுவல்களின் தோற்றம் குறிப்பிடத்தக்க இடத்தினை வகிக்கிறது. உரைநடையை எளிமைப்படுத்திப் பரவலாக்கியது, பேசும் தமிழை எழுதும் தமிழாகச் சீரமைத்தது, அச்சு ஊடகங்களை அறிமுகப்படுத்தியது ஆகியவற்றின் ஊடாகத்தான் கிறித்தவப் பனுவல்கள் தமிழ்ச் சூழலில் அறிமுகமாயின. சமகாலப் போக்கையொட்டி வட சொற்களை மிகுதியாகப் பயன்படுத்தும் போக்கையும் கிறித்தவப் பனுவல்களில் காண்கிறோம். ஆயினும் தொடக்காலக் கிறித்தவப் படைப்புகளை நோக்கும்போது, 19ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரை கிறித்தவத் தமிழ் உருப்பெறவில்லை என்றே தோன்றுகிறது.

ஒரு மொழிநடையின் மீது பாதுகாப்புணர்வும், வழிபாட்டுணர்வும் தோன்றும்போதுதான் ஓர் இலக்கணம் விதிமுறைப் பண்புகளை ஏற்கிறது என்ற கூற்றுக்கிணங்க, விவிலிய மொழிபெயர்ப்புகளின் செல்வாக்கும், விவிலிய மொழிபெயர்ப்பு நடையின் மீது தமிழ்க் கிறித்தவர்களுக்கு ஏற்பட்ட ஈடுபாட்டுணர்வுமே கிறித்தவத் தமிழ் உருக்கொள்வதற்குக் காரணங்களாக அமைந்தன. ஆயினும் கிறித்தவர் படைத்த செய்யுள் படைப்புகளில் கிறித்தவத் தமிழ்க் கூறுகளைக் காண முடிவதில்லை.

கிறித்தவத் தமிழின் தோற்றம் மற்றும் வளர்ச்சி குறித்தும் கிறித்தவத் தமிழ் உருக்கொண்டதற்குப் பின்புலமாக அமைந்த காரணிகள் குறித்தும் இந்நூலின் இரண்டாம் இயலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது. வட சொற்களைத் தவிர்க்க வேண்டும் என்ற முனைப்பை விவிலிய மொழிபெயர்ப்பின் வரலாற்றில்தான் முதலில் காண்கிறோம். விவிலிய மொழிபெயர்ப்புகளில் படிப்படியாக வடசொற்கள் நீக்கப்பட்டு வந்துள்ளதையும் இரண்டாம் இயல் விவரிக்கிறது.

மூன்றாம் இயலில் கிறித்தவத் தமிழ்க் கூறுகள் எடுத்துக் காட்டப்படுகின்றன. கலைச் சொற்கள், இலக்கணக் கூறுகள், கருத்துப்படிமங்கள், மரபுத் தொடர்கள், கருத்தாடல் அமைப்பு, வழிபாட்டு முறை ஆகியன கிறித்தவப் பனுவல்களில் இடம்பெற்றுள்ள பாங்கு விளக்கப்பட்டுள்ளது.

இறுதி இயலில் கிறித்தவத் தமிழின் தற்காலப் போக்கு ஆராயப்படுகிறது. கிறித்தவத் தமிழ் பற்றிய கிறித்தவர் மனப்பாங்கு மாறிவருவதும், அதற்காக மேற்கொள்ளப்பட்டுள்ள முயற்சிகளும் இவ்வியலில் சுட்டிக்காட்டப்படுகின்றன. கிறித்தவத் தமிழ் தொடர்பாக மேலும் ஆராய்வதற்குரிய களங்களும் சுட்டிக்காட்டப் பட்டுள்ளன.

'கிறித்தவத் தமிழ்' எனும் தலைப்பில் அறக்கட்டளைச் சொற்பொழிவு ஆற்றும் வாய்ப்பினை நல்கிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கும், முன்னாள் இயக்குநர் ச.சு. இராமர் இளங்கோ அவர்கட்கும், இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகும் இந்நூல் வெளிவர வேண்டுமென்பதில் பேரார்வம் கொண்டு, வெளிக்கொணர்ந்துள்ள நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும், 'கிறித்தவமும் தமிழும்' அறக்கட்டளைக்குப் பொறுப்பு வகித்த முனைவர் வி.சி. சசிவல்லி, தற்பொழுது பொறுப்பு வகிக்கும் முனைவர் தூ. நிர்மலா தேவி ஆகியோருக்கும் எனது நன்றி.

சென்னை கிறித்தவக் கல்லூரியில் நிகழ்ந்த சொற்பொழிவுக்குத் தலைமையேற்று அரியதோர் ஆய்வுரை நல்கிய சென்னைப் பேராயர் பேரருள்திரு டாக்டர் வே. தேவசகாயம் அவர்கட்கும், வாழ்த்துரையும் உதவியும் நல்கிய எங்கள் கல்லூரி முதல்வர் டாக்டர் அலெக்சாண்டர் மந்திரமூர்த்தி அவர்கட்கும் நன்றியுடையேன். இவ்வாய்விற்குப் பல்வேறு நிலைகளிலும் உதவிகள் புரிந்து, சொற்பொழிவு நிகழ்வைச் சிறப்புற நடத்திய தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் மோசசு மைக்கேல் பாரடே அவர்கட்கும், துறை நண்பர்கட்கும் என்றும் நன்றியுடையேன். இந்நூலின் கையெழுத்துப்படியைச் செப்பமாக உருவாக்கியவர் மாணவி பொ. எஸ்தர், மெய்ப்புத் திருத்தி உதவிய பேரா. த.அருள்பத்மராசன் இவர்கட்கும் என் நன்றி.

ப. டேவிட் பிரபாகர்

# பொருளடக்கம்

இயல் 1

# கிறித்தவத் தமிழ் - அறிமுகம்

**1.0** 'சமயந்தோறும் நின்ற தையலாள்' எனச் சிறப்பிக்கப் பெறுவது தமிழ்மொழி. இதனைப் 'பக்தியின் மொழி' எனப் போற்றினார் தனிநாயகம் அடிகள். சமயங்களால் தமிழும் தமிழால் சமயங்களும் வளர்ச்சி பெற்றதை மொழி - இலக்கிய வரலாறுகள் எடுத்துக் காட்டுகின்றன.

ஒவ்வொரு சமயமும், தத்தம் சமயஞ்சார்ந்த கருத்துக்களை - மரபுகளை - உணர்வுகளைப் புலப்படுத்தி நிற்கின்றன. இவ்வகையில் கிறித்தவக் கோட்பாடுகள், தத்துவங்கள், நம்பிக்கைகள், வழிபாடு, பக்தியுணர்வு ஆகியவற்றைப் புலப்படுத்தும் முறையில் கிறித்தவர்கள் பயன்படுத்தும் மொழிப்பாங்கே 'கிறித்தவத் தமிழ்' எனப்படுகிறது.

கிறித்தவத் தமிழ் என்பது, தமிழில் ஒரு கிளைமொழி என்று சொல்லத்தக்க அளவிற்குத் தனித்தன்மையுடன் விளங்குகிறது. கிறித்தவர்களின் சமயஞ்சார்ந்த படைப்புகளில் மட்டுமின்றி, அவர்தம் அன்றாடச் சமூகச் செயற்பாடுகளிலும் கிறித்தவத் தமிழ்க் கூறுகள் இடம் பெறுவதைக் காணுகிறோம். ஒரே மொழி பல்வேறு நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்படும் முறையில் நேரும் மாறுபாட்டை மொழியியலார் 'துறை வழக்கு' (Register) என்று குறிப்பிடுவதையொட்டி, கிறித்தவத் தமிழைத் துறைவழக்காகக் கருதலாம்.

**1.1** கிறித்தவ இலக்கியங்கள் குறித்தும் கிறித்தவப் படைப்பாளர்கள் குறித்தும் தமிழில் ஆய்வுகள் பல நிகழ்ந்துள்ளன. கிறித்தவ அறிஞர்களின் பலவகைப்பட்ட தமிழ்ப் பணிகள் குறித்தும் சிறந்த ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. தெ.பொ.மீ., ச.த. சற்குணம், மயிலை சீனி.வேங்கடசாமி, க. மீனாட்சி சுந்தரம், சேவியர் தனிநாயகம் அடிகள், சபாபதி குலேந்திரன், தே. ராஜரீகம், சூ. இன்னாசி, செ.வை. சண்முகம் முதலியோர் கிறித்தவர்களின் தமிழ்ப்பணி குறித்து ஆய்வு செய்தவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள். ஆயினும், கிறித்தவத் தமிழ்நடை குறித்த விரிவான ஆய்வுகள் இதுவரை மேற்கொள்ளப்படவில்லை என்றே கருதவேண்டியுள்ளது.

தமிழ் விவிலியத்தின் மொழிபெயர்ப்புப் பின்னணி, வரலாறு, மொழிநடைப் பண்புகள் ஆகியவற்றை எடுத்துக்காட்டும் வண்ணம், குறிப்பிட்ட சில ஆய்வுகளே மேற்கொள்ளப்பட்டுள்ளன. பேராயர் சபாபதி குலேந்திரன் எழுதிய "தமிழ் வேதாகமத்தின் வரலாறு" என்ற நூலும், பேரா. சரோஜினி பாக்கியமுத்து எழுதிய 'விவிலியமும் தமிழும்' என்ற நூலும் இவ்வகையில் குறிப்பிடத்தக்கவை. இவ்விரு ஆய்வுகளும் விவிலிய மொழி பெயர்ப்புகளை மட்டும் ஆதாரமாகக் கொண்டு செய்யப்பட்டுள்ளன.

விவிலிய மொழிபெயர்ப்பின் தமிழ் நடை பற்றி ப.டேவிட் பிரபாகர் (1987, 1988, 1996), அ. டேனியல் (1989) ஆகியோரும் ஆராய்ந்துள்ளனர். எம்.எஸ். திருமலையின் 'Aspects of language use' (1983) நூலில் இடம் பெற்றுள்ள 'In search of identity : A care study of Tamil christians' என்ற கட்டுரையும், மோசசு மைக்கேல் பாரடே மற்றும் ப. டேவிட் பிரபாகர் 'தரு' இதழில் எழுதியுள்ள 'கிறித்தவத் தமிழ்' (1997) எனும் கட்டுரையும், கிறித்தவ வானொலி நிகழ்ச்சிகளைக் கருத்தாடல் நோக்கில் ஆய்வு செய்துள்ள ந. இளங்கோவின் ஆய்வும் (1996) கிறித்தவத் தமிழ் பற்றிய ஆய்வில் குறிப்பிடத்தக்கவை.

கிறித்தவர்களின் (சமயஞ்சார்ந்த) உரைநடைப் பனுவல்களில் காணப்படும் கிறித்தவத் தமிழ்க் கூறுகளை, கிறித்தவர்களின் செய்யுள் படைப்புகளில் காண்பது அரிது. அவை பெரும்பாலும், தமிழ்ச் செய்யுள் மரபைத் தழுவியே அமைந்துள்ளன.

**1.2** கிறித்தவத் தமிழின் அடிப்படைகளை உருவாக்குவதில் பின்வரும் காரணிகளுக்குக் குறிப்பிடத்தக்க பங்கு உண்டு.

1. தமிழ் விவிலிய மொழிபெயர்ப்புகள்
2. வழிபாட்டு முறைமை (அருளுரை, இறைவேண்டல் உட்பட)
3. கிறித்தவ இசைப்பாடல்கள் (பாமாலை, கீர்த்தனை, புதுப்பாடல்கள்)
4. காலந்தோறும் தமிழில் ஏற்பட்டுவந்துள்ள மாற்றங்களும், மொழியின்பாற்பட்ட கிறித்தவர் மனப்பாங்கும்.

இவற்றுள் விவிலிய மொழிபெயர்ப்புகளுக்குக் குறிப்பிடத்தக்க பங்கு இருப்பினும், பிற காரணிகளையும் உள்ளடக்கி ஆராய்தல் கிறித்தவத் தமிழின் அடிப்படைகளை விளங்கிக் கொள்ள உதவும்.

அன்றிக்ஸ் அடிகளாரின் 'தம்பிரான் வணக்கம்' (1557) தொடங்கி, தமிழில் கிறித்தவப் பனுவல்கள் தொடர்ந்து எழுதப்பட்டு வந்திருப்பினும் விவிலிய மொழிபெயர்ப்புகள் 18ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில்தான் (சீகன்பால்க் 1714) வெளிவரத் தொடங்கின. தொடக்கத்தில் எழுந்த நூல்கள் பெரும்பாலும் சமய விளக்கமாயும், வழிபாட்டு முறைகளைக் கொண்டனவாகவும் அமைந்தவை. சமயஞ்சார்ந்த பனுவல்கள் மட்டுமன்றி மருத்துவம், அகராதி, இலக்கணம் போன்ற துறைகளிலும் கிறித்தவர்கள் படைப்புகளை உருவாக்கினர். விவிலிய மொழிபெயர்ப்புகளோடு, இலக்கியப் படைப்புகளையும் அவ்வப்பொழுது படைத்தளித்தனர்.

**1.3** கிறித்தவத் தமிழ் திடீரென ஒரு குறிப்பிட்ட காலக் கட்டத்தில் தோன்றிவிடவில்லை. காலந்தோறும் தமிழில் ஏற்பட்டு வந்துள்ள மாற்றங்களை உள்ளடக்கியதாகவே கிறித்தவத்தமிழ் வளர்ந்துள்ளது. தமிழில் ஏற்பட்ட மாற்றங்களுக்கும் காரணமாக இருந்துள்ளது. உரைநடையைப் பரவலாக்குதல், பிற மொழிக்கலப்பு, பேச்சு வழக்கைக் கையாளுதல், பிற சமய மரபுகளைத் தழுவுதல், கலைச்சொற்களை உருவாக்குதல், மொழி பெயர்ப்புக் கொள்கை, மொழி பற்றிய மனப்பாங்கு, சமூகநோக்கு போன்ற பல காரணிகளும் கிறித்தவத் தமிழை உருவாக்குவதில் குறிப்பிடத்தக்க அளவில் செயலாற்றியுள்ளன. தற்பொழுது வழங்கப்படும் கிறித்தவத் தமிழ் சென்ற நூற்றாண்டின் இறுதியில் உருக்கொண்டதாகக் கருதலாம்.

கிறித்தவத் தமிழை யாழ்ப்பாணத்தார் 'ஆங்கிலத்தமிழ்' எனக் குறிப்பிட்டதையும் (சரோஜினி பாக்கியமுத்து 1990 : 208) History of Tamil Christian Literature என்ற நூலை எழுதிய தே. ராஜரீகம் 'எபிரெயத் தமிழ்' எனக் குறிப்பிட்டதையும் (மேற்கோள் - அ. டேனியல் 1989 : 70) கிறித்தவத் தமிழ் பற்றிய ஆய்வில் கவனத்திற் கொள்ளவேண்டும்.

கிறித்தவத் தமிழை உருவாக்கியவர் விவிலிய மொழிபெயர்ப்பாளரான பெப்ரீஷியஸ் (Fabricius) ஐயரே (1711 - 1796) எனச் சபாபதி குலேந்திரன் (1967 : 88) குறிப்பிடுகின்றார்.

மேலும் 'இவ்வகை பாஷை நவீனமானதென்றும், சாதாரணமாய் இந்துக்கள் உபயோகிக்கும் பாஷையல்லவென்றும் ஏனையோர் சொல்லுவர்' எனவும் குறிப்பிடுகின்றார். பெப்ரீஷியசுக்குப் பின்னர் விவிலிய மொழி பெயர்ப்புகளைச் செய்த இரேனியசும் (C.T.Erhenius) பவரும் (H.Bower) பெப்ரீஷியஸ் நடையிலிருந்து பெரிதும் மாறுபடவில்லை. பவருக்குப் பிறகு லார்சன், (L.P. Larsen) மோனகன், (C.H. Monohan) ஆகியோரது மொழிபெயர்ப்புகள் வெளிவந்தபோதிலும், கிறித்தவர்கள் பழக்கம் காரணமாகவும், புழக்கம் காரணமாகவும், தொடர்ந்து பவர் மொழிபெயர்ப்பைப் பயன்படுத்தும் நிலை காணப்படுகின்றது. எனவே, கிறித்தவத் தமிழை நிலைபெறச் செய்ததில் பவர் மொழிபெயர்ப்புக்குக் குறிப்பிடத்தக்க பங்கு உண்டு. இந்த நடையிலிருந்து அதிகம் வேறுபட்டால் அதை வேதப்புரட்டென்று எண்ணும் கிறித்தவர்களும் இருந்தனர் (சபாபதி குலேந்திரன் **1967 : 88**) தமிழகத்தில் மட்டுமன்றி இலங்கையிலும் கிறித்தவத் தமிழின் செல்வாக்கைக் காண்கிறோம்.

'தமிழ் வேதாகமத்தில் வரலாறு' நூலை எழுதிய பேராயர் சபாபதி குலேந்திரன் தம் நூலைக் கிறித்தவத் தமிழிலேயே எழுதியதாகக் குறிப்பிட்டுள்ளார். கடந்த நூற்றாண்டில் சென்னை வேதாகமச் சங்கத்தின் அறிக்கைகள் கிறித்தவத்தமிழில் எழுதப்பட்டதைச் சுட்டிக் காட்டி, 1850இல் யாழ்ப்பாணத்தில் செய்யப்பட்ட பரிசோதனை மொழிபெயர்ப்பு (Tentative Version) தள்ளுபடி செய்யப்பட்டதற்கு, அந்தப்பதிப்பு கிறித்தவத் தமிழ் நடையை விட்டு விலகிச் சென்றதுதான் எனக் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு கிறித்தவத் தமிழ் மீது ஈடுபாடு கொண்டவர்களையும், கிறித்தவத் தமிழ் நடையைத் தவிர்க்க முயன்றவர்களையும் விவிலிய மொழிபெயர்ப்பு வரலாற்றில் நம்மால் காண இயலும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில், திராவிடக் கருத்தியலுக்கும், தனித்தமிழ்ச் சிந்தனைக்கும் பங்களிப்பு செய்த கிறித்தவர்கள், இவற்றால் தமிழில் நேர்ந்த மாற்றங்களை உள்ளடக்கியதாகக் கிறித்தவத் தமிழை வளர்த்தெடுக்கவில்லை. மாறாக, 'கிறித்தவத் தமிழ்' பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் நிலைபேற்றுத் தன்மையை அடைவதைக் காண்கிறோம்.

தனித்தமிழ் இயக்கமும், திராவிட இயக்கங்களின் செல்வாக்கும் தமிழ் நடையிலும், மொழிபற்றிய மனப்பாங்கிலும் ஏற்படுத்திய மாற்றங்கள் அண்மைக் காலங்களில்தான் கிறித்தவத் தமிழில் பாதிப்பை ஏற்படுத்தின எனலாம்.

கத்தோலிக்க சபையின் சார்பில் வெளிவந்த தமிழக ஆயர் குழுவின் விவிலிய மொழிபெயர்ப்பும் (1970-73) இந்திய வேதாகமச் சங்கத்தின் சார்பில் வெளிவந்த தே. ராஜரீகத்தின் மொழிபெயர்ப்பும் (1979), கத்தோலிக்க சீர்திருத்த சபைகளுக்குப் பொதுவாகச் செய்யப்பட்ட ஒன்றிப்புத் தமிழாக்கமும் (திருவிவிலியம் 1995) இக்காலத் தமிழ் நடையில் எளிமையாகவும், இனிமையாகவும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

கத்தோலிக்கரது வழிபாட்டில், சமயஞ்சார்ந்த ஒருசில கலைச் சொற்களைத் தவிர, தற்காலத் தமிழ் நடையைக் காணுகிறோம். மேலும், திருச்சபைகளில் நடைபெறும் சிறப்பு வழிபாடுகளிலும், இந்திய சமய மரபில் அமைந்த ஆசிரமங்களின் வழிபாட்டு முறைகளிலும் தற்காலத்தமிழ் நடையின் செல்வாக்கைக் காணுகிறோம். அண்மையில் வெளிவந்துள்ள 'பொது மொழிபெயர்ப்பு' பரவலாகப் பயன்படுத்தப்படும்பொழுது, தமிழ்க் கிறித்தவர்களின் மொழிபற்றிய நோக்குநிலையில் மாற்றம் ஏற்படக்கூடும். தற்பொழுது, ஆயர்கள் சிலரும், பொதுநிலையினர் சிலரும் நூல்கள், இதழ்கள், அருளுரைகள் வாயிலாகத் தனிப்பட்ட முறையில், தற்காலத் தமிழில் கிறித்தவப் பனுவல்களை உருவாக்கி வருகின்றனர். ஆயினும் கிறித்தவத் தமிழின் செல்வாக்கு பெரும்பான்மையான தமிழ்க் கிறித்தவரிடையே, குறிப்பாகச் சீர்திருத்த மரபினரிடையே தொடர்ந்து பேணப்பட்டு வருவதைக் காணமுடிகிறது. இன்று 'கிறித்தவத் தமிழ்' விரும்பிப் பேணப்படுகிற ஒன்றாக இல்லாமல், பழக்கத்தின் காரணமாகக் கையாளப்படுகிற மொழிநடையாக இருக்கிறது. கிறித்தவர்களிடையே மொழிநடை பற்றிய மனப்பாங்கு மாறிவரும் இன்றைய காலகட்டத்தில் (Transtition Period) கிறித்தவத் தமிழ் பற்றிய இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

இயல் 2

# கிறித்தவத் தமிழ் : தோற்றம், வளர்ச்சி

இவ்வியல், கிறித்தவச் சமயப் பனுவல்கள் தமிழில் தோற்றம் பெற்ற மொழிச் சூழலை விவரிப்பதோடு, கிறித்தவத் தமிழின் தொடக்க கால வளர்ச்சிக்கு, அடிப்படையாக அமைந்த காரணிகள் சிலவற்றையும் விளக்குகிறது. படித்தோருக்கும் பாமரருக்கும் புரியும் வண்ணம், பண்டித நடைக்கும் பாமரர் நடைக்கும் இடைப்பட்ட உரைநடை வகையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டது. பேச்சு வழக்கைப் பயன்படுத்தியது, பேசும் தமிழை எழுதும் தமிழாகச் சீரமைத்தது, தொடக்கத்தில் சமஸ்கிருதச் சொற்கலப்பைப் பொருட் படுத்தாத விவிலிய மொழி பெயர்ப்பாளர்கள் பின்னர் சமஸ்கிருதச் சொற்களைத் தவிர்த்தது போன்ற காரணிகள் கிறித்தவத் தமிழின் அடிப்படைகளை உருவாக்கியதில் குறிப்பிடத்தக்க பங்கு வகிக்கின்றன.

## 2.1 கிறித்தவச் சமயப் பனுவல்களின் தோற்றமும் மொழிச் சூழலும்

ஐரோப்பியர் வருகையின்போது, தமிழில் இலக்கியப் படைப்புகள் மட்டுமன்றி, மருத்துவம், சோதிடம், இலக்கணம், அகராதி முதலிய படைப்புகளும் செய்யுள் நடையிலேயே அமைந்திருந்தன. தொல்காப்பியத்தில் காணப்படும் 'உரைநடை வகை' பற்றிய குறிப்பும் (செய்யுளியல் - நூற்பா 172), இறையனார் அகப்பொருளுரையும் தமிழில் உரைநடைநூல்கள் இருந்தமைக்குச் சான்று காட்டினாலும் தமிழில் உரைநடை இலக்கியம் தனியாக வளர்ச்சி பெறவில்லை. உரைநடை ஒரு பொருட்டாகக் கருதப்படாத நிலையை எம்.சீனிவாச ஐயங்கார் குறிப்பிடுகின்றார். (மேற்கோள்: **சரோஜினி பாக்கியமுத்து 1990:19**) சமணர்கள் பிராகிருத மொழியிலிருந்து தம் சமய நூல்களைத் தமிழில் ஆக்கிக்கொள்ள வேண்டிய தேவை ஏற்பட்டபோதும், ஒரு கலப்பு மொழியிலேயே உரைநடை நூல்களைப் படைத்தனர். இச்சூழலில்தான் கிறித்தவப் படைப்புகள் தமிழில் எழத் தொடங்கின. கிறித்தவர் தம் படைப்புகளைச் சாதாரணக் கல்வியுடையோரும் புரிந்து கொள்ளும்

வண்ணம் உரைநடையிலேயே எழுதமுன்வந்தனர். கிறித்தவர்களின் செய்யுள் படைப்புகள் பின்னர்தான் வெளிவந்தன.

ஐரோப்பியர் வருகைக்கு முன் தமிழில் மூன்று வகையான உரைநடைப் போக்குகள் இருந்ததைச் சு. சக்திவேல் (1987:88) சுட்டிக் காட்டுகிறார்.

1. பண்டை இலக்கிய, இலக்கணங்களுக்கு உரைவகுத்த உரையாசிரியர்களின் நடை
2. சமஸ்கிருதமும், தமிழும் கலந்து எழுதப்பட்ட மணிப் பிரவாள நடை
3. கல்வெட்டு, சாசனங்களில் காணப்பட்ட பேச்சு வழக்கையொட்டிய நடை

இத்தகைய உரைநடைப் போக்குகள் தமிழில் காணப்பட்ட போதிலும், உரைநடை இலக்கிய வாகனமாக வளர்ச்சி பெறவில்லை. ஆயினும் சமகாலத்தில் சமஸ்கிருதம், லத்தீன், எபிரேய மொழிகளில் உரைநடை இலக்கியங்கள் வளர்ச்சி பெற்றிருந்ததைக் காண்கிறோம். தமிழில் காணப்படும் இந்நிலை பற்றி மயிலை சீனி. வேங்கடசாமி (1980 : 12, 13) பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

> ஐரோப்பியர் வருவதற்கு முன்னே தமிழ் மொழியில் தனி உரைநடை நூல்கள் இருந்ததில்லை. இலக்கணம், இலக்கியம், நிகண்டு, சோதிடம், மருத்துவம் முதலிய எல்லா நூல்களும் செய்யுளிலேயே இயற்றப்பட்டு வந்தன. இவைகளுக்கு உரையாசிரியர் இயற்றிய உரைகளைத் தவிர தனிப்பட்ட உரைநடை நூல்கள் ஒன்றேனும் இருந்ததில்லை....... தமிழ்த் தொல்லாசிரியர்கள் பாட்டையே பெரிதும் போற்றிச் செய்யுள் நடையிலேயே எல்லா நூல்களையும் இயற்றி வைத்தனர் என்பது உண்மை.

தமிழில் உரைநடை எழுதும் பழக்கம் இன்றும் துவக்க நிலையில் இருக்கிறது. விரைவாகவும் சரமாரியாகவும் தமிழிற் கவிதை பாடக்கூடிய புலவர்கள் உரைநடையிற் சில சொற்றொடர்கள் எழுதத் தெரியாமலிருக்கின்றனர் என்ற கருத்தை உவின்ஸ்லோ தம் தமிழ் - ஆங்கில அகராதியின் முன்னுரையில்

குறிப்பிடுகிறார். இந்நிலைக்குக் காரணம் கூறும் அபிடுபாய் என்ற கத்தோலிக்கத் துறவி,

> பழைய நூல்களில் ஒன்றுகூட உரைநடையிலோ அல்லது மக்கள் பேசும் பாமர மொழியிலோ இல்லை. அவர்களுடைய மருத்துவ நூல்கள் கூடக் கவிதைகளாகத்தான் இருக்கின்றன. இப்படி பாமரருக்குப் புரியாத மொழியில் எழுதிவருவது அந்தணரின் யுக்தியாகத் தெரிகிறது. அறிவுத்துறைகளில் பிற சாதியினர் புகாதிருக்கவும், அவற்றைத் தாங்கள் ஏகபோகமாக அனுபவிக்கவும் அவர்கள் கையாண்டு வருகிற பழக்கமாக இருக்கிறது இது.

எனக் குறிப்பிட்டுள்ளார். (மேற்கோள் : சரோஜினி பாக்கியமுத்து, **1990 : 23**)

ச. இராசமாணிக்கம் சே.ச.வும் தம் 'The first Oriental Scholar' என்ற நூலில் இதே கருத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

> தமிழ்நாட்டில் இடைக்காலங்களில் சனநாயகம் இல்லாததும் சாதி அமைப்பின் விளைவாகக் கல்வி மேல்சாதியினருக்கு மட்டுமே அனுமதிக்கப்பட்டிருந் தமையுமே இந்நிலைக்கு முக்கிய காரணங்கள்.

தமிழில் காணப்பட்ட இந்நிலை குறித்து விரிவாக விளக்கும் சரோஜினி பாக்கியமுத்து (1990 : 23) பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

> உரைநடை சாதாரண மக்களின் இலக்கிய வாகனம். நிலப்பிரபுத்துவ ஆதிக்கத்தில் அது தழைப்பதில்லை. சனநாயகச் சூழலில்தான் அது வளரமுடிகிறது. தமிழ் நாட்டு ஆட்சி முறைகளில் சனநாயக மரபு இல்லாததும், அங்கு நிலவிய சாதிவருண அமைப்பும், அவ்வமைப்பின் கடுமையான அமலும், சமயமும், கல்வியும் ஒரு சிலரின் அனுபவமாக மட்டுமே இருந்ததுமே முக்கிய காரணங்களாக இருந்திருக்கும் எனத் தோன்றுகிறது.

மேலும் அவர், தமிழ்ப் பேச்சு நடை புத்துயிர்பெற்றதும், வளர்ந்ததும் இலக்கியவாகனமாக உருவெடுத்ததும் விவிலிய மொழி பெயர்ப்புகளால்தான் எனக் குறிப்பிட்டுள்ளார்.

## 2.2 தொடக்க காலக் கிறித்தவப் படைப்புகள்

இயேசு சபை திருப்பணியாளராகத் தமிழகம் வந்த அன்றிக்ஸ் அடிகளின் நூல்கள்தான் தமிழில் வெளிவந்த முதல் கிறித்தவப் படைப்புகளாகும். இவர் எழுதிய 'தம்பிரான் வணக்கம்' (கொல்லம் 1557) 'கிரீசித்தியானி வணக்கம்' (கொச்சி 1579). ஃபிளாஸ் சேங்டம் (தூத்துக்குடி அல்லது புன்னைக்காயல் 1586) ஆகிய மூன்று நூல்கள் நமக்குக் கிடைக்கின்றன. இம்மூன்று நூல்களும் போர்ச்சுகீசிய மொழியிலிருந்து மொழிபெயர்க்கப் பட்டவை. முதலிரண்டு நூல்களும் ஜெபங்களையும் வழிபாட்டு முறைகளையும் உள்ளடக்கியதாகும். மூன்றாவது நூல் கிறித்துவின் சீடர்கள் மற்றும் அருட்தொண்டர்களின் வரலாறுகளையும் வழிபாடுகளையும் கொண்டது.

இவரைத் தொடர்ந்து, தத்துவபோதகர் எனப்படும் இராபர்ட் டி நொபிலி (1577-1656) அதிக அளவில் உரைநடைப் படைப்புகளைத் தமிழில் எழுதினார். இவரது ஞானோபதேச காண்டம், ஆத்தும நிர்ணயம், புனர்சென்ம ஆட்சேபம், தூஷண திக்காரம், நித்திய சீவன சல்லாபம், ஞானோபதேசக் குறிப்பிடம், தேவமாதா சரித்திரம் போன்ற நூல்கள் அச்சில் வெளிவந்துள்ளன. இவருக்குப் பிறகு தமிழகம் வந்த வீரமாமுனிவர் எனப்படும் கான்ஸ்டான்டைன் ஜோசப் பெஸ்கி (1680-1747), பரமார்த்த குரு கதை, வாமன் சரித்திரம், வேதவிளக்கம், வேதியர் ஒழுக்கம், லுத்தரினத்தியல்பு, பேதக மறுத்தல், திருச்சபைக் கணிதம் முதலிய உரைநடை நூல்களைப் படைத்துள்ளார். சதுரகராதியையும், தேம்பாவணி, திருக்காவலூர் கலம்பகம், கித்தேரியம்மாள் அம்மானை போன்ற செய்யுள் இலக்கியப் படைப்புகளையும் இவர் ஆக்கியுள்ளார்.

## 2.3 விவிலிய மொழிபெயர்ப்புகள்

கிறித்தவம் விவிலிய நூலை அடிப்படையாகக் கொண்டது. 'Book based religion' என்ற தொடரால் கிறித்தவம் குறிப்பிடப்

படுவதுண்டு. மகமது நபியும் கிறித்தவர்களைப் 'புத்தகத்தின் சனம்' என்று குறிப்பிட்டுள்ளார். தமிழகத்தில் கிறித்தவர்களை 'வேதக்காரர்கள்' என்றும், கிறித்தவத்திற்கு மதம் மாறியவனை 'வேதத்தில் விழுந்துவிட்டான்' என்று கூறும் வழக்கையும் காண்கிறோம். எனவே கிறித்தவமும் கிறித்தவப் படைப்புகளும் விவிலியத்தையே சார்ந்து நிற்கின்றன. விவிலிய மொழிபெயர்ப்பின் நடையே கிறித்தவத் தமிழை உருவாக்குவதில் பெரும்பங்கு வகித்துள்ளது.

முதலில் விவிலியத்தைத் தமிழில் மொழிபெயர்த்தவர் தரங்கம்பாடி வந்த ஜெர்மன் அருட்தொண்டரான சீகன்பால்கு (1683-1719) ஆவர். இவருக்கு முன் விவிலியத்தின் சிறுபகுதிகள் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன). தமிழ்-ஜெர்மன் அகராதி தமிழிலிருந்த நூல்களைப் பற்றிய விவரங்களைத் தரும் 'Bibiotheca Malabalica' என்ற அகராதி நூலையும், மலபார் தெய்வங்கள் பற்றிய 'Genelology of Malabari Gods' என்ற நூலையும் இவர் ஆக்கியுள்ளார்.

சீகன்பால்குவிற்குப் பின் பெப்ரீஷியஸ் (1711-1796) இரேனியஸ் (1790-1838) பவர் (1813-1885) லார்சன் (1862-1940) மோனகன் (1869-1951) ஆகியோரது விவிலிய மொழிபெயர்ப்பு களும், இலங்கையில் பீட்டர் பெர்சிவல் செய்த பரிசோதனை மொழிபெயர்ப்பும் (1850), கத்தோலிக்க சபையின் சார்பில் 1857, 1891, 1904 ஆகிய ஆண்டுகளில் வெளிவந்த விவிலிய மொழிபெயர்ப்புகளும் குறிப்பிடத்தக்கவை.

விவிலிய மொழிபெயர்ப்புகள் மட்டுமன்றி, இறையியல், மருத்துவம், இலக்கணம் போன்ற துறைகளிலும் உரைநடை நூல்களைக் கிறித்தவப் பணியாளர்கள் படைத்தனர்.

நாவல், சிறுகதை, வரலாறு, தன்வரலாறு, கட்டுரை முதலிய இலக்கிய வடிவங்களுக்குப் பயன்படுத்தப்படுவதற்கு முன், சமயச் சொல்லாடல்களுக்கு உரைநடை பயன்படுத்தப்பட்டதை என். முருகேச முதலியார் குறிப்பிடுகிறார். (1976 : 56-70)

மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்ட ஸ்ரீபுராணம் முதலிய சமண நூல்களும், சிவஞான போதத்திற்குப்

பண்டிப்பெருமாளால் செய்யப்பட்ட விருத்தியும், சிவஞான சுவாமிகளின் 'சிற்றுரை'யும் வைணவ உரையாசிரியர்களில் வேதாந்த தேசிகரின் படைப்புகளும் தொடக்கால உரைநடைப் படைப்புகளில் குறிப்பிடத்தக்கவை. ஆயினும், உரைநடையை எளிமைப்படுத்தி ஜனநாயகப்படுத்தி, தற்கால உரைநடைக்கு வித்திட்டவர்கள் கிறித்தவப் படைப்பாளர்களே. எழுத்துச் சீர்திருத்தம், கடின சந்தி விதிகளை நீக்குதல், பேசும் தமிழை எழுதும் தமிழாகத் தரப்படுத்துதல், பத்தி, இடைவெளி, நிறுத்தற்குறிகளை அறிமுகப்படுத்துதல் முதலிய முயற்சிகளையும் தொடக்க காலத்தில் கிறித்தவர் மேற்கொண்டனர்.

இதனைத் தொடர்ந்து ஆறுமுக நாவலர் (1822-1879) இராமலிங்க அடிகள் (1826-1889) சோம சுந்தர நாயக்கர் (1846-1900) பாம்பன் சுவாமிகள் (1852-1929) போன்றோரும் உரைநடையின் இன்றியமையாமையை உணர்ந்து சிறந்த உரைநடைப் படைப்புகளை எழுதினர். உரைநடையின் இன்றியமையாமை பற்றி மாயூரம் வேதநாயகம் பிள்ளை தம் 'பிரதாப முதலியார் சரித்திரம்' நாவலின் முன்னுரையில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

> 'வசன காவியங்களால் மக்கள் திருந்தவேண்டுமே யல்லாது செய்யுட்களைப் படித்துத் திருந்துவது அசாத்தியம் அன்றோ? ஐரோப்பிய மொழிகளில் வசன காவியங்கள் இல்லாமலிருக்குமானால் அந்தத் தேசங்கள் நாகரிகமும் நற்பாங்கும் அடைந்திருக்கக் கூடுமோ? அப்படியே நம்முடைய தாய்மொழியில் வசன காவியங்கள் இல்லாமலிருக்கிற வரையில், இந்தத் தேசம் சரியான சீர்திருத்தம் அடையாதென்பது நிச்சயம்'.

கிறித்தவப் படைப்பாளர்கள் உரைநடையில் தமது நூல்களைப் படைத்த சூழலைப் பின்வருமாறு சரோஜினி பாக்கியமுத்து (1990 : vii) குறிப்பிடுகிறார்.

> "செய்யுள் கல்விமான்களின் கௌரவச் சின்னமாகக் கருதப்பட்டு வந்த நிலையை இந்த வேத மொழிபெயர்ப்புகள் மெல்லத் தகர்த்தன. ஆன்மிக எழுச்சிக்கு மட்டுமல்ல, உரைநடையை இலக்கிய

வாகனமாக மாற்றி அதில் படைப்பிலக்கியங்கள் வரவும் இந்த மொழிபெயர்ப்புகள் வழிவகுத்தன. தனித்தமிழ் இயக்கமும் கூட இந்த மொழி பெயர்ப்புகளின் வாயிலாகத்தான் தோன்றியது."

கிறித்தவர்கள் மேற்கொண்ட உரைநடையின் தன்மை பற்றிக் குறிப்பிடும் சு. சக்திவேல் (1987 : 88),

மேலைநாட்டாரின் தமிழ் உரைநடை ஒருவகையில் தமிழுக்குப் புதியதென்றே கூறலாம். கிறித்தவ சமயத்தைப் பொது மக்களிடையே பரப்புவதையே நோக்கமாகக் கொண்டிருந்ததால் பொதுமக்கள் பேசும் பேச்சு வழக்கையொட்டிய நடையை மேற்கொள்ள ஆரம்பித்தனர். இந்நடையை 'விவிலியத் தமிழ் (Bible Tamil) என்று கூறுவாருமுளர். மேலைநாட்டாரின் உரைநடையைக் கூர்ந்து நோக்கின், உரையாசிரியர்களின் நடையையொத்த ஒரு நடையையும் பேச்சு வழக்கையொட்டிய ஒரு நடையையும் கலந்து எழுதினர் என்பதை நாம் அறிகிறோம்.

தமிழில் தனி உரைநடை நூல் ஐரோப்பியரால் முதல்முதல் உண்டாக்கப்பட்டது என்பது மறுக்கமுடியாத உண்மை

என மயிலை சீனி வேங்கடசாமி (1980:18) கூறுவதும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

### 2.4 கிறித்தவத் தமிழ்நடை

கிறித்தவத்தமிழ் உரைநடையின் வளர்ச்சி நானூறு ஆண்டுகளுக்கும் மேற்பட்ட வரலாற்றினை உடையது. இக்காலப் பகுதியில் கிறித்தவத் தமிழ் உரைநடைப் பாங்கு படிப்படியாக மாறிவந்துள்ளதைக் காணமுடிகிறது. கலைச்சொற்களின் பயன்பாடு, பிறமொழிக் கலப்பு, பேச்சு வழக்கைக் கையாளுதல், மூல மொழியின் மரபுத் தொடர்களை மொழிபெயர்த்தல் போன்ற பல்வேறு நிலைகளிலும் இம்மாற்றம் காணப்படுகிறது.

கிறித்தவ உரைநடை வரலாறு அன்றிக்ஸ் அடிகளின் 'தம்பிரான் வணக்கம்'(1557) என்ற நூலுடன் தொடங்குவது

முன்னர் சுட்டப்பட்டது. இந்நூலின் நடை எளிமையானது; சரளமானது. கிறித்தவச் சமயக் கலைச்சொற்கள் போர்ச்சுகீசிய மொழியிலிருந்து ஒலிபெயர்த்துக் கொள்ளப்பட்டன. சொற்கள் இடைவெளியின்றி அச்சிடப்பட்டிருத்தல், பத்திப்பிரிவு, நிறுத்தக் குறிகள் இல்லாமை, மெய்யெழுத்து புள்ளி பெறாமை, எகர ஒகர குறில் நெடில் வேறுபாடின்மை ஆகியன அன்றிக்ஸ் உரைநடையில் காணப்படுகின்றன.

> கிறித்தவ மதத்தின் அடிப்படையான கொள்கைகளைச் சிறு பிள்ளைகளும் கண்டுபிடிக்கக் கூடிய முறையில் அக்காலக் கடற்கரை மக்கள் பேச்சுநடையில் மொழிபெயர்த்திருக்கிறார்....... பேச்சு வழக்கை ஒட்டி அதுவும் அக்காலப் பரதவர், முக்குவர் பேச்சை ஒட்டி அமைந்த இந்நூல் அக்காலத்தில் கடற்கரையில் வாழ்ந்த தமிழ்மக்கள் கொச்சைப் பேச்சைப் படம்பிடித்துக் காட்டுகிறது.

என அன்றிக்ஸ் அடிகளின் 'கிரீசித்தியானி வணக்கம்' நூலைப் பதிப்பித்துள்ள ச. இராசமாணிக்கம் தம் முன்னுரையில் குறிப்பிடுகிறார் (1963:217).

இவருக்குப் பின்வந்த தத்துவபோதகர் தம் படைப்புகளில் போர்ச்சுகீசியச் சொற்களைத் தவிர்த்துள்ளார். அன்றிக்ஸ் பயன்படுத்திய 'தம்பிரான்' என்ற சொல்லைச் 'சருவேசுவரன்' என மாற்றிக்கொண்டார். உயர்சாதியினரும் தம்மை ஏற்றுக்கொள்ளும் படி பிராமணசந்நியாசி போல் நடை, உடை பழக்கங்களை மாற்றிக் கொண்டார். குடுமி வைத்துக் கொள்ளுதல், பூணூல், திலகம் அணிதல் போன்றவற்றைத் தொடர்ந்து பின்பற்ற மதம் மாறிய பிராமணர்களைக் கேட்டுக் கொண்டார்.

தத்துவ போதகர் கற்றோருக்கென ஒரு உயர்ந்த நடையினையும் சாதாரண மக்களுக்கெனப் பேச்சுநடையினையும் பயன்படுத்தியதை இக்னேசியஸ் இருதயம் (1977:21) தம் நூலில் குறிப்பிடுகிறார்.

தமிழில் காணப்பட்ட வழக்குகளைச் செந்தமிழ், கொடுந்தமிழ் எனப் பிரித்து வரையறுத்து விளக்கியவர் வீரமாமுனிவர். இரண்டு வகையான தமிழுக்கும் தனித்தனியே

இலக்கணமும் எழுதியுள்ளார். செந்தமிழ் நடைக்காக 'வாமன் சரித்திரத்தையும்', கொடுந்தமிழுக்கு எடுத்துக்காட்டாகப் 'பரமார்த்த குரு கதை'யையும் எழுதியுள்ளார். இதற்கு வீரமாமுனிவர் தந்துள்ள முன்னுரையில் பின்வருமாறு குறிப்பிடுகிறார். (சூ. சோசபு சுந்தரராசு 1973:256-27)

> என் இனிய நண்பர்களின் அறிவுரையின்படி பொதுமக்களின் பேச்சுத் தமிழுக்கு எடுத்துக்காட்டாக இப்பகுதியை இவ்விடத்தில் அமைப்பது என்னுடைய கருத்துக்கு மாறானதன்று. இதனை இவ்விடத்து அமைப்பது தமிழ்பயிலத் தொடங்குபவர்க்குத் தம் கருத்தினைத் தமிழில் வெளியிடுவதற்கும் இலக்கண அமைதியோடு வாக்கியம் அமைப்பதற்கும் பயிற்சியளிக்கும். நாம் இங்கே சிறந்த தமிழ் வாக்கியங்களையோ கலப்பு வாக்கியங்களையோ காண முயன்றால் ஏமாந்துபோவோம். தமிழ்ப் பொதுமக்கள் சுருங்கிய சிறு வாக்கியங்களைக் கையாள்வதை விரும்புகின்றனர்.

இவரது உரைநடையின் இயல்பு பற்றிக் குறிப்பிடும் சூ. இன்னாசி (1985 : 68 - 69) பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

> பழந்தமிழ் உரைநடைக்கும் தற்கால உரைநடைக்கும் பாலமாக அமைந்தவர் வீரமாமுனிவர். அவர் இரண்டு உரைநடைகளுக்கும் இடையே இடைவெளியைக் குறுக்கி எளிமையைப் புகுத்தினார். அதே சமயத்தில் கூறும் பொருளுக்கேற்ப நடையின் தன்மையை மாற்றிக் கொண்டார். வேற்றுமொழிச்சொல் கலக்காமல் தமிழ் உரைநடையைக் கையாள முற்பட்டவர்களுக்கு முன்னோடியாகத் திகழ்ந்தார்.

ஆயினும் பேச்சுத்தமிழில் அமைந்த சீகன்பால்குவின் மொழிபெயர்ப்பை வீரமாமுனிவரால் ஒப்புக்கொள்ள முடியவில்லை. சீகன்பால்குவின் விவிலிய மொழிபெயர்ப்பு பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார். (மேற்கோள் : சரோஜினி பாக்கியமுத்து 1990:51)

> முதல்வரியைப் படித்தவுடனேயே வாசிப்பவனின் கண்கள் எரியும். நாக்கு உலர்ந்துவிடும். காதுகளோ

பிளந்தே போகும். பின்பு அவனிடமிருந்து பெருத்த சிரிப்பு வெடிக்கும்.

மேலும் அவர் தம் 'வேதவிளக்கம்' என்ற நூலில், தரங்கம்பாடி லூத்தரன் சபையினர் தங்கள் விவிலிய மொழிபெயர்ப்பில் மதத்தையும் தமிழையும் பாழ்படுத்தினர் என்றும், "தரங்கம்பாடித் தமிழில் வேதாகமத்தைக் கொடுத்தல் ஒளிரும் நகையைச் சேற்றில் புதைப்பது போலவும், அமிழ்தக் கடலில் நஞ்சைக் கலப்பது போலவும், அழகிய ஓவியத்தில் கரியைப் பூசுவது போலவும் இருக்கும் என்றும், அதுவரை சமஸ்கிருத வார்த்தைகள் மட்டும் தமிழில் ஓரளவு பயன்படுத்தப்பட்டு வர, தரங்கம்பாடி நூல்களில் கீழ்மொழித் தமிழும் எல்லோரும் ஏளனம் செய்யும் மூன்றாம் வகைத் தமிழும் காணப்படுகின்றன" என்று குறை கூறியுள்ளார். (மா.சு. சம்பந்தன் 1980 : 67)

சீகன்பால்கு தம் மொழிபெயர்ப்பின் நடையை அன்றிக்ஸ், தத்துவ போதகர் ஆகியோரது நூல்களைச் சார்ந்தே அமைத்துக் கொண்டார். 'சீகன்பால்கு பயன்படுத்திய சருவேசுவரன், ஸ்பிரித்துசாந்து, கொடி முந்திரிகை பழரசம் போன்ற சொற்கள் உரோமன் சபையார் கி.பி. 1617இல் மொழிபெயர்த்த சல்லாபங்களில் காணப்படுகின்றன. நற்செய்திப் பகுதியில் அறசெயசிஷ்டய மத்தேயு, அறசெயசிஷ்ட மாற்கு எனச் சீகன்பால்கு 'அறசெயசிஷ்ட' என்ற அடைமொழியைக் கையாள்வதும், இயேசு பேசும் இடங்களிலெல்லாம் 'திருவுளம்பத்தினார்' என்ற தொடரை ஆள்தும் கத்தோலிக்க மரபைத் தழுவியதேயாகும். தத்துவ போதகர், வீரமாமுனிவர் படைப்புகளில் பேச்சு வழக்குச் சொற்கள் காணப்படுகிறதெனினும், மூன்றாம் தரத் தமிழைக் கையாண்டதாகச் சீகன்பால்கைக் கடுமையாகச் சாடியுள்ளார் வீரமாமுனிவர். வீரமாமுனிவரின் உரைநடைப் படைப்புகள் பலவும் தரங்கம்பாடி புராட்டஸ்டன்ட் மிஷனரிகளுக்கு எதிரானது என்று இக்னேசியஸ் இருதயம் குறிப்பிடுகிறார். (1977:29)

எனவே அன்றிக்ஸ் தொடங்கி சீகன்பால்கு வரையுள்ள காலப் பகுதியில் 'கிறித்தவத் தமிழ்' உருவாகவில்லை என்றே கருதலாம். அன்றிக்ஸ் மொழிநடை பற்றி டாக்டர் மு.வ. குறிப்பிடும் கருத்து இதனை உறுதிப்படுத்தும். (மேற்கோள் : சரோஜினி பாக்கியமுத்து 1990 : 33, 34)

சென்ற இரண்டு நூற்றாண்டுகளில் கிறிஸ்தவப் பாதிரிமார்களின் பேச்சாலும் எழுத்தாலும் கிறிஸ்தவர்க்கென்று தனியே ஒரு கிளைமொழி வளர்ந்துவிட்டது. ஆனால், பதினாறாம் நூற்றாண்டில் அவ்வாறு இல்லை என்பது அன்றிக்ஸ் அடிகளாரின் எழுத்தக்களால் தெரிகிறது. அக்காலத்து மக்கள் எழுதிவந்த நடையையும் பேசிவந்த சொற்களையும் அமைத்தே அவர் எழுதியுள்ளார்.

## 2.5 கிறித்தவத் தமிழின் தொடக்கம்

'தற்பொழுது கிறித்தவரிடையே வழக்கிலிருக்கிற 'கிறித்தவத் தமிழ்' உருவாகக் காரணமாக இருந்தவர் பெப்ரீஷியசே' (Fabricius) எனக் குறிப்பிடும் சபாபதி குலேந்திரன் (1967:88) 'இவ்வகை பாஷை நவீனமானது என்றும், சாதாரணமாய் இந்துக்கள் உபயோகிக்கும் பாஷையல்ல' என்றும் குறிப்பிட்டுள்ளார்.

முந்தைய இயலில் குறிப்பிட்டவாறு, கிறித்தவத்தமிழை நிலை பெறச் செய்ததில் பவர் மொழிபெயர்ப்புக்குக் குறிப்பிடத்தக்க பங்கு உண்டு. பவர் மொழிபெயர்ப்பின் மீது கிறித்தவர்களுக்கு ஏற்பட்ட வழிபாட்டு உணர்வே இதற்குக் காரணம் எனலாம். இது பழக்கம் காரணமாக ஏற்பட்டது. இந்த நடையிலிருந்து மாறுபட்டால் அதை 'வேதப்புரட்டு' என்று எண்ணும் கிறித்தவர்களும் இருந்ததைச் சபாபதிகுலேந்திரன் குறிப்பிடுகிறார். இந்த நடையை யாழ்ப்பாணத்தார் 'ஆங்கிலத் தமிழ்' எனக் குறிப்பிடுவதும், தே. ராஜரீகம் 'எபிரெயத் தமிழ்' எனக் குறிப்பிடுவதும் முன்னர் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

சீகன்பால்கு மொழிபெயர்ப்பு தொடங்கி (1714) 1949 ஆம் ஆண்டு வரையிலான காலப்பகுதியில் முழுவிவிலியம் ஆறு முறையும், புதிய ஏற்பாடு எட்டு முறையும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன. ஆயினும் இதனை ஒத்த காலத்தில் ஆங்கிலத்தில் இரண்டு மொழிபெயர்ப்புகள் மட்டுமே செய்யப்பட்டுள்ளன. ஒரே மொழியில் பல மொழிபெயர்ப்புகள் தோன்றுவதற்குப் பிற காரணங்கள் இருப்பினும் மொழிநடை பற்றிய நிறைவின்மையே பெரும்பான்மையான மொழிபெயர்ப்புகளுக்குக் காரணமாகச் சபாபதி குலேந்திரன் (1968 : 30) குறிப்பிடுகிறார்.

யாழ்ப்பாண இணைச் சங்கம் பெர்சிவல் தலைமையில் மேற்கொண்ட விவிலிய மொழிபெயர்ப்புக்குச் சென்னை வேதாகமச் சங்கம் விதித்த கட்டுப்பாடுகள் குறிப்பிடத்தக்கவை. 1611ஆம் நூற்றாண்டின் ஆங்கிலத் திருப்புதலை விட்டுச் (The authorised Version) சிறிதும் விலகக்கூடாது என்றும், 'ஆங்கில மொழிபெயர்ப்பின் கருத்து மாத்திரமன்றி, வசன அமைப்பு சொல்லடுக்கு, குறியீடுகள் எல்லாம், முற்றும் முழுதுமாகப் பாதுகாக்கப்படவேண்டும்' எனவும் நிபந்தனை விதித்தது. (சபாபதி குலேந்திரன் 1968 : 120) இம்மொழிபெயர்ப்பு 1850இல் முற்றுப் பெற்றபோது, சென்னை வேதாகமச் சங்கம் அதனை நிராகரித்தது. இரேனியஸ் மொழிபெயர்ப்பைப் போலவே, யாழ்ப்பாண மொழிபெயர்ப்பும் மூலத்தைத் தழுவவில்லை என்ற குற்றச்சாட்டைச் சுமத்தி சென்னை வேதாகமச் சங்கம் நிராகரித்துவிட்டது.

இரேனியஸ், வேதாகம மொழிபெயர்ப்புக் கொள்கைகள் குறித்த தம் நூலில் (1827) அப்பொழுதிருந்த முரண்பாடுகளைக் குறிப்பிடுகிறார்.

1. சிலர் சொல்வழி மொழிபெயர்ப்பையும், வேறுசிலர் தாராள மொழிபெயர்ப்பையும் ஆதரிக்கின்றனர். இரேனியஸ் சொல்வழி மொழிபெயர்ப்புக்கு (literal translation) எதிரானவர்.

2. கல்வியறிவு அதிகமற்ற சாதாரண மக்களின் நடையில் இருக்கவேண்டும் எனச் சிலரும், மாறாகக் கற்றோரின் நடையிலேயே இருக்க வேண்டும் எனச் சிலரும் கருதினர். இரேனியஸ் இவ்விரண்டிற்கும் இடைப்பட்டதொரு நடையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்.

3. மூல மொழியிலிருந்து நேரடியாகத் திருப்புதல் நடைபெற வேண்டும் எனச் சிலரும், இடைப்பட்ட ஒரு மொழிபெயர்ப்பை ஆதாரமாகக் கொண்டு செய்யப்படவேண்டும் எனச் சிலரும் கருதினர். இரேனியஸ், மூல மொழியிலிருந்து நேரடியாக மொழிபெயர்க்கப்பட வேண்டும் எனக் கருதினார்.

4. ஒரு மொழியின் மரியாதைக் குறியீடுகள் அந்த மொழி பேசுவோரின் பண்பாட்டுடன் ஒன்றியவை என இரேனியஸ் கருதினார். பவர் மொழிபெயர்ப்பு திரித்துவர் மூவருக்கு மட்டுமே

மரியாதை அளிக்கிறது. பிற விவிலியப் பெரியோர்களை அவன், இவன் எனச் சுட்டுகிறது. தமிழில் மரியாதைகளைக் கடைபிடிப்பது மிக அவசியம் என இரேனியஸ் கருதினார்.

விவிலிய மொழிபெயர்ப்பின் வரலாற்றில் இத்தகைய பல பிரச்சினைகள் மொழிபெயர்ப்பின் நடைப்பண்புகளைத் தீர்மானிப்பதற்குக் காரணமாக இருந்துள்ளன. ஆயினும் இரண்டு முக்கியமான பிரச்சினைகளை விரிவாகக் காணுதல் இன்றியமையாதது.

1. பேச்சு வழக்கைக் கையாளுதல்

2. சமஸ்கிருதச் சொற்கலப்பு

## 2.6 பேச்சு வழக்கைக் கையாளுதல்

பேச்சு வழக்கையொட்டி ஒரு புதிய நடை தமிழில் தோன்றுவதற்குக் கிறித்தவப் படைப்பாளர்களுக்குக் குறிப்பிடத்தக்க பங்கு உண்டு. பேச்சு வழக்குகளைக் கையாளும் போக்கை முதல் கிறித்தவப் படைப்பாளரான அன்றிக்ஸ் அடிகளின் படைப்புகளிலிருந்தே காண்கிறோம். இவரது 'தம்பிரான் வணக்கம்' (1557) எனும் நூலில் நெல்லை, முகவை மாவட்டப் பரதவர் பேச்சு வழக்கைக் காண்கிறோம். வெகுசனங்களை இலக்காகக் கொண்டு எளியநடையில் நூல்கள் ஆக்கப்பட்டன. மேலும், ஐரோப்பியர் பொதுமக்களோடு உறவாடவும், கிறித்தவப் பனுவல்களைத் தமிழில் தரவும் தமிழ்ப்பேச்சு நடையில் கிறித்தவர்கள் கவனம் செலுத்தினர். பேச்சு மொழிக்கு எழுதப்பட்ட 'கொடுந்தமிழ்' முதலிய இலக்கண நூல்களும், அகராதிப் பணிகளும் இந்நோக்கிலேயே செய்யப்பட்டன.

கிறித்தவப் பனுவல்களைப் பொதுமக்கள் மொழியில் அமைப்பது ஐரோப்பிய நாடுகளிலும் காணப்படும் போக்காகும். போப்பாண்டவர் டமேசசின் ஆணைப்படி கி.பி. 402இல் செய்யப்பட்ட மொழிபெயர்ப்பு 'வல்கத்தா' எனப்படுகிறது. இந்த லத்தின் சொல்லுக்குப் 'பொதுமக்களுடையது' எனப்பொருள். மேலும் மார்ட்டின் லூத்தரின் மொழிபெயர்ப்பும் ஜெர்மன் மக்கள் பேசும் நடையில் சரளமாக அமைந்துள்ளது.

தொல்காப்பியம் வழக்கு, செய்யுள் ஆகிய இரண்டையும் கருத்தில் கொண்டு ஆக்கப்பட்டிருப்பினும், 'வழக்கெனப்படுவது

உயர்ந்தோர் மேற்றே' (தொல். பொருள். 647) எனக் கருதும் போக்கு காணப்படுகிறது. உயர்ந்தோர் வழக்கின்றி ஏனையோர் வழக்கு 'இழி வழக்கு எனவும், இழிசினர் வழக்கு' எனவும் இழித்துக் கூறப்பட்டது. செந்தமிழ் என்பது அகத்தியருக்குப் பிற்பட்டது; அகத்தியர் வழுக்களைக் களைந்து செம்மைப்படுத்தியதால் செந்தமிழ் ஆயிற்று எனத் திராவிடப் பிரகாசிகை ஆசிரியர் குறிப்பிடுகிறார். (மேற்கோள் : அ. சண்முகதாஸ் 1989 : 69) செந்தமிழ் நாடு எது என்பதை வரையறுப்பதிலும் கருத்துவேறுபாடு காணப்படுகிறது. வடவேங்கடத்துக்கும், தென் குமரிக்கும் இடைப்பட்ட நிலம் முழுவதையும் தெய்வச்சிலையார் செந்தமிழ் நாடாகக் கொள்ள, சேனாவரையர், மயிலைநாதர், நச்சினார்க்கினியர் ஆகியோருக்குச் செந்தமிழ்நாடு என்பது சோழ நாடாகவும், சங்கர நமச்சிவாயர் சிவஞானமுனிவர், ஆறுமுகநாவலர் போன்றோருக்குப் பாண்டிய நாடாகவும் அமைகிறது. இது சமயங்கலந்த அரசியல் நிலைப்பாட்டைச் சுட்டிக் காட்டுகிறது.

பண்டைத் தமிழகத்தில் தமிழுணர்வு ஆற்றலாக மாறாமல் புலவர்களின், அரசர்களின், மக்களின் நெஞ்சில் ஓர் இன்ப உணர்வாக இருந்ததைப் ப. கிருஷ்ணன் குறிப்பிடுகிறார். (1984 : 107) பிற மொழியாளர்களின் ஆட்சியில் சமயம் சார்ந்து தமிழ்வளர்ந்ததையும் காண்கிறோம். 'தமிழ் மொழித் தலைவர்' என்றே திருஞான சம்பந்தர் புராணத்தில் அப்பர் குறிப்பிடப்படுகிறார். இவ்வாறே, சுந்தரரும் 'தமிழ்நாதன்' என்று குறிப்பிடப்படுகிறார். (ப. டேவிட் பிரபாகர் 1993 : 46) மேலை நாட்டார் பேச்சு வழக்கையொட்டிப் புது நடையினைத் தோற்றுவித்த காலத்தில் சிவஞானமுனிவர் போன்றோர் செந்தமிழில் நூல்களைப் படைத்தனர். சிவஞான போதத்துக்கு எழுதப்பட்ட 'மாபாடியம்' இவரது உரைத்திறனுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். (சு.சக்திவேல் 1987 : 101) இவருக்கு முன்னர், புதுவை பிரெஞ்சு அரசில் மொழிபெயர்ப்பாளராக இருந்த ஆனந்தரங்கம் பிள்ளை (1709 - 1761) தம் நாட்குறிப்பில் பேச்சுநடையைக் கையாண்டுள்ளார்.

இக்காலத்தில், கிறித்தவர்கள் பேச்சு நடைக்கும் எழுத்து நடைக்கும் இடைப்பட்ட ஒரு நடையைத் தம் படைப்புகளுக்குத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர். ஆயினும், தொடக்ககாலப் படைப்புகளில், பேச்சு வழக்குச் சொற்கள் பலவற்றைக் காண்கிறோம். அன்றிக்ஸ் அடிகளின் படைப்புகளில் வாத்தை

(வார்த்தை), இழமை (இளமை), பாற்க (பார்க்க), வழந்தால் (வளர்ந்தால்) போன்ற பேச்சு வழக்கு வடிவங்களும், அதேதெனில்ப் பெருக்க, என்றால்க் கொம்மாஞ்சிய, உண்டாகினதினால்ப் பல, அதினால்த் தம்பிரான் போன்ற தவறான புணர்ச்சி வடிவங்களும் காணப்படுகின்றன. (சூ. இன்னாசி 1980 : 119) அன்றிக்ஸ் காலக் கல்வெட்டுகளிலும் பேச்சு வழக்குகள் காணப்படுகின்றன. இதற்கு முன்னர், பத்தாம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளில் மிகக்குறைந்த செந்தமிழ் வழக்குகளும், அதிகப்படியான வழக்குகளும் காணப்படுவதை அ. வேலுப்பிள்ளை (1980:171) குறிப்பிட்டுள்ளார்.

நொபிலியின் படைப்புகளிலும் எளிசாய், குடுத்து, பட்டுது, அஞ்சு, அதுகள், ஆச்சுது, வேணும், பன்னி, இத்தை (இதை), அங்கீகரிச்சு, காரணமன்னியே (காரணமின்றியே) முதலிய பேச்சு வழக்குகள் காணப்படுகின்றன. வீரமாமுனிவரின் தேம்பாவணி கீர்த்தனையில் சோலி, கெலிக்கும், விருதா, கலியாணம், கெற்பம், சோடு போன்ற சொற்களும், சதுரகராதியில் டம்பக்கம், டாப்பு, டக்கிலும், டாக்கு, டாப்புகிறது, டோல், டோம்பர் போன்ற சொற்களும் இடம்பெற்றுள்ளன.

சீகன்பால்கு தம் படைப்புகளில் எண்ணற்ற பேச்சு வழக்குச் சொற்களைக் கையாண்டுள்ளார். காத்துகள் (காற்றுகள்), குத்தம் (குற்றம்), வளவு (வளைவு), அத்தை (அதை) போன்ற சொற்கள் இரவது படைப்புகளில் காணப்படுகின்றன. இவரது விவிலிய மொழிபெயர்ப்பு 1714-ல் வெளிவந்தபோது, அது 'பறையர் வேதம்' என அழைக்கப்பட்டது. (சரோஜினி பாக்கியமுத்து 1990 : 23) தரங்கம்பாடி அச்சகத்திற்காக, ஜெர்மனியிலுள்ள ஆலே (Halle) நகரில் உருவாக்கப்பட்ட அச்செழுத்துக்கள் பெரிதாகவும் 15, 16ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு எழுத்துக்களின் சாயலிலும் உருவாக்கப் பட்டன. (D. Rajarigam 1958 : 11. 12) சீகன்பால்கைத் தொடர்ந்து விவிலிய மொழிபெயர்ப்பை மேற்கொண்ட சூல்சின் மொழிபெயர்ப்பிலும் (1723-27) பேச்சு வழக்குகள் காணப்படுகின்றன.

கிறித்தவர்கள் தொகுத்த அகராதிகளிலும், இலக்கண நூல்களிலும் பேச்சு வழக்குகளுக்கு முதன்மை அளிக்கப்பட்டுள்ளது. வீரமாமுனிவர் தமது 'சதுரகராதி' முன்னுரையில் பின்வருமாறு குறிப்பிடுகிறார். (சூ. இன்னாசி (ப.ஆ) 1989 : xiii)

> 'இது (சதுரகராதி) ஐரோப்பியருக்கும் பயனுள்ளதாகும். ஏனெனில் அவர்களில் யாரும் பேச்சுத்தமிழை அறியாமல் செந்தமிழுக்குத் திடீரெனக் குதித்து ஓடத் துணியமாட்டார்கள் என எண்ணுகிறேன்'

வீரமாமுனிவர் பேச்சுமொழிக்கெனக் 'கொடுந்தமிழ்' (A Grammar of the Common dialect of the Tamil language) எனும் இலக்கண நூலையும் படைத்துள்ளார். சீகன்பால்கின் தமிழ்-ஜெர்மன் அகராதியிலும், பெப்ரீஷியஸ் அகராதியிலும் (1799) பேச்சு வழக்குச் சொற்களுக்கு முதன்மை அளிக்கப்பட்டன. பின்னர் 1852இல் வெளிவந்த மைரன் வின்ஸ்லோ அகராதியில் மக்களிடையே பொது வழக்காக இருக்கும் சொற்களுக்கு முதன்மை கொடுக்கப்பட்டுள்ளன. G.U. போப் எழுதிய 'A Hand book of the Ordinary dialect of the Tamil language' என்ற நூலிலும் பேச்சு வழக்குகளுக்கு முதன்மை அளிக்கப்பட்டுள்ளது. W.G.B. வெல்ஸ் 1947இல் (ஆறாம் பதிப்பு) கொழும்புவில் வெளியிட்ட 'Colloquial Tamil' என்ற நூல் முதலில் 'கூலித்தமிழ்' என்ற பெயரில் வெளியிடப்பட்டது.

வீரமாமுனிவர் 'கொடுந்தமிழ்' என்பது கொச்சை வழக்குகளைக் குறிக்காமல் 'பேச்சுத் தகு மொழி வழக்கு' (Standared Spoken Variety), 'பொது கிளைமொழி' என்ற பொருளில் ஆளப்பட்டதாகச் செ.வை. சண்முகம் (1993:68) கருதுகிறார். கிறித்தவர் பயன்படுத்திய உரைநடையைப் பற்றிக் குறிப்பிடும் வி. செல்வநாயகம் (1957:78) பின்ருமாறு குறிப்பிடுகிறார்.

> பேச்சு வழக்கில் உள்ள மொழியை ஆதாரமாகக் கொண்டு எழுதுகிற நடை எதுவோ அதுதான் சிறந்தது என்பதை அவர்கள் நன்கு அறிந்திருந்தனர். அதனால் பொதுமக்கள் பேசும் தமிழில் உள்ள சொற்களையும் இலக்கண அமைதிகளையும் பயன்படுத்தித் தமிழுக்கு ஒரு புதிய நடையிலே தம் கருத்துக்களை வெளியிடத் தொடங்கினர்.

18-ஆம் நூற்றாண்டின் இறுதியில் எழுதப்பட்டு 1894இல் வெளியிடப்பட்ட 'சிலுவைப் பாதையின் ஞான முயற்சி' என்ற நூலுக்கு எழுதிய முன்னுரையில், ஞானப்பிரகாச சுவாமிகள், தன் நூலில் பயன்படுத்தப்பட்ட மொழிநடை குறித்துப் பின்வருமாறு குறிப்பிடுகிறார். (அ.மு. பரமசிவானந்தம் 1966:174)

இப்புத்தகத்தை யாவருமெளிதில் வாசித்துணர வேண்டி இலக்கண விதிப்படி எழுத்துக்களும் சொற்கள் மிகுந்த புணர்ச்சி விகாரங்களின்றிச் செந்தமிழுடன் கொடுந்தமிழ் மொழிகளுஞ் சில வாக்கியங்களிலொருமையிற் பன்மையும் பன்மையிலொருமையும் பிரயோகிக்கப்பட்டிருக்கின்றன.

விவிலிய மொழிபெயர்ப்பாளர்களில் பெப்ரீஷியசும், இரேனியசும், மோனகனும் பேச்சுத்தமிழைத் தரப்படுத்தி, எழுதும் தமிழாக உருவாக்கியவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள். கற்றோர், பாமரர் இரு சாராருக்கும் புரியவேண்டும் என்ற நோக்கத்தில், பெப்ரீஷியஸ் தம் விவிலிய மொழிபெயர்ப்பை மேற்கொண்டார். பிராமணர், சூத்திரர், பறையர் முதலியோருக்கு வாசித்துக்காட்டி, தேவையான திருத்தங்களைப் பெப்ரீஷியஸ் மேற்கொண்டதாக லேமன் (A. Lehmann) குறிப்பிடுகிறார். (மேற்கோள் : சபாபதி குலேந்திரன் 1967:64)

'பேசும் தமிழை இலக்கணப்படுத்தி அதை எழுதும் தமிழாகச் சீர்மைப்படுத்தியவரும் முதன்முதலாகச் சந்தி பிரித்து வெளியிட்டவரும் இரேனியசே' எனக் குறிப்பிடுகின்றார் சரோஜினி பாக்கியமுத்து (1990:146). இரேனியஸ், பள்ளி மாணவர்கட்குப் பல பாடநூல்களையும் எழுதியுள்ளார். எழுதப்படிக்கத் தெரியாதவர் கூடப் பிறர் வாசிக்கக் கேட்டுப் புரிந்துகொள்ளும்படியாக விவிலிய மொழிபெயர்ப்பு அமையவேண்டும் என இரேனியஸ் கருதினார். பண்டிதர் நடை 'பழைய சொற்களையும் வழக்கொழிந்த உருபுகளையும் ஏராளமாகக் கொண்டிருப்பதால் பண்டிதர் பலருக்கும் அந்நடை கடினமானது' என இரேனியஸ் கருதுகிறார். பேச்சுத் தமிழை எழுத்துத் தமிழாக மாற்றியமைப்பதில் உள்ள சிக்கல்களையும் இரேனியஸ் குறிப்பிடுகிறார். (மேற்கோள் : சரோஜினி பாக்கியமுத்து 1990:130)

> இந்நடை பல சிதையுண்ட சொற்களையும் தெளிவற்ற விகுதிகளையும் கொண்டுள்ளது. வட்டாரத்துக்கு வட்டாரமும், சாதிக்குச் சாதியும் வேறுபடுகின்றது. இலக்கணம், சொற்பிரயோகம், உச்சரிப்பு அனைத்திலும் ஒன்றுக்கொன்று மாறுபடுகின்றது. இதன் கொச்சைகள் வேகமாக மாறவும் அழியவும் கூடியன. இந்நடையில் பொதுவாக இக வாழ்க்கைக்குரிய சொற்கள் மட்டுமே

உண்டு. தத்துவ ஆன்மிக விசாரம் குறித்த சொற்கள் அதிகம் கிடையா. மேலும் கற்றோர் இந்நடையை மிக இழிவாக மதிப்பிட்டனர்.

இரேனியஸ் இவ்விரண்டு நடைகளுக்கும் இடைப்பட்ட நடையைத் தேர்ந்தெடுத்துக்கொண்ட போதிலும், இவரது நடை தாழ்வாகக் கருதப்பட்டு 'வாசகம்' எனக் குறிப்பிடப்பட்டது. பின்னர் வந்த மோனகன் 'எந்த கிராமத்திலுமுள்ள அதிகம் தாழ்ந்த கிறித்தவனும் புதிய ஏற்பாட்டைப் படித்து விளங்கக் கூடியதாக இருக்கவேண்டும்' எனவும், நடையானது கொச்சையாக இராமல் இலகுவானதாக இருக்கவேண்டும் எனவும் கருதினார். தொடர்ந்து மேற்கொள்ளப்பட்ட விவிலிய மொழிபெயர்ப்புகளிலும் இக்கொள்கை பின்பற்றப்பட்டது.

பேச்சு-எழுத்து வழக்குகளுக்கிடையே உயர்வு-தாழ்வு காணும் மனப்பாங்கு படிப்படியாக மாறத் தொடங்கியது. 'பேசுவது போல் எழுதுவது உத்தமம்' எனப் பாரதி குறிப்பிடும் போக்கினைப் புனைகதைப் படைப்பாளர்களிடம் காண்கிறோம். தமிழில் மட்டுமின்றி, வங்காளத்தில் 'சலித்பாஷை', 'சாதுபாஷை' என்ற பாகுபாடு உண்டு. சலித்பாஷை பேசுவதற்கும், சாதுபாஷை எழுதுவதற்கும் பயன்படுத்தப்பட்டது. வங்காளத்தின் புத்ததேவபோஸ் சலித்பாஷையிலேயே இலக்கியங்கள் படைக்கப் படவேண்டும் என்று வற்புறுத்தியவர். இதற்கு ஆக்கம் அளித்ததில் தாகூருக்குப் பெரும்பங்கு உண்டு.

தமிழ்ச்சூழலில், பேச்சு வழக்கைச் சொல், சந்தி, வாக்கிய அமைப்பு ஆகிய நிலைகளில் சீர்மைப்படுத்தி இலகுவான எழுதும் தமிழை உருவாக்கியதில் கிறித்தவப் படைப்பாளர்களுக்குப் பெரும்பங்கு உண்டு. இம்முயற்சி ஒரு நூற்றாண்டிற்கும் மேலாகப் படிப்படியாக நிகழ்ந்ததாகக் கருதவேண்டும்.

1864இல் மேற்கொள்ளப்பட்ட பவர் மொழிபெயர்ப்பையும் இன்றைக்கு இருபது ஆண்டுகளுக்கு முன்னர் வெளியிடப்பட்ட தே.ராஜரீகத்தின் மொழிபெயர்ப்பையும் ஒப்பிட்டு நோக்கினால், பேச்சு வழக்குகளைத் தவிர்க்கும் போக்கு இக்காலத்தில் காணப்படுவதைத் தெளிவாக உணரலாம்.

| பவர்மொழிபெயர்ப்பு (1864) | ராஜரீகம் மொழிபெயர்ப்பு (1979) | |
|---|---|---|
| படவில் | படகில் | (மத் - 4:21) |
| பதினாலு | பதினான்கு | (மத் - 1:17) |
| பேரிடுதல் | பெயரிடுதல் | (மத் - 1:21) |
| பண்ணுதல் | செய்தல் | (மத் - 5:9) |
| விளக்கைப் கொளுத்தி | விளக்கை ஏற்றி | (மத் - 5:15) |

## 2.7 சமஸ்கிருதச் சொற்களின் பயன்பாடு

கிறித்தவப் பனுவல்கள் தமிழில் எழத்தொடங்கிய காலத்தில், சமஸ்கிருதச் சொற்களைக் கையாளுதல் போக்கைப் பரவலாகக் காண்கிறோம். சமயப்பனுவல்கள் மட்டுமன்றி, பிற துறைசார்ந்த படைப்புகளிலும் இப்போக்கு காணப்படுகிறது.

சமஸ்கிருதச் சொற்களின் தமிழ்வடிவம் பற்றித் தொல்காப்பியர் முதலே இலக்கண ஆசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர். தமிழையும் சமஸ்கிருதத்தையும் கலந்து எழுதும் மணிப்பிரவாளநடை இடைக்காலத்தில் செல்வாக்குப் பெற்று விளங்கியது. குறிப்பாக, சமண, வைணவச் சமயப் பனுவல்களில் இப்போக்கைக் காண்கிறோம். இவ்வாறு கலந்து எழுதுவதைக் கற்றோர் பெருமையாகக் கருதியதையும் காண்கிறோம். மணிப்பிரவாள நடையில் சில இடங்களில் வடமொழி வினைச் சொற்களும், வேற்றுமை உருபேற்று வழங்கும் பிராகிருதச் சொற்களும் இடம்பெற்றுள்ளதைச் சக்திவேல் குறிப்பிட்டுள்ளார். (1987:37)

சமஸ்கிருதத்தையும் தமிழையும் சமமாகக் கருதும் மனப்போக்கும் இந்திய சமய மரபில் காணப்படுகிறது.

> 'தமிழ்ச்சொலும் வடசொலும் தாள் நிழல் சேர'
> (சம்பந்தர் : தேவாரம் 77-4)

> 'செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவன்'
> (நாலாயிர திவ்ய பிரபந்தம் 1654)

பின்னர் நாயக்கராட்சியிலும், மராத்தியர் ஆட்சியிலும் பிறமொழி ஆதிக்கத்தின் காரணமாகத் தமிழ் எழுச்சியுற்றபோதும்

சமஸ்கிருதம் புறக்கணிக்கப்படவில்லை. இதனைப் பின்பற்றியே ஆறுமுக நாவலரும் 'சமஸ்கிருதமும் தமிழும் சிவபெருமானாலும் இருடிகளாலும் அருளிச்செய்யப்பட்ட இலக்கண நூல்களை உடைமையாலும் தம்முள் சமத்துவம் உடையனவேம்' எனக் குறிப்பிடுகிறார். (மேற்கோள் : எம்.ஏ. நுஃமான் 1988:44)

அன்றிக்ஸ் தொடங்கி 19ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரை தமிழ் உரைநடையில் சமஸ்கிருதச் சொற்களைப் பயன்படுத்தும் போக்கில் மாற்றம் எதுவும் நிகழவில்லை. அன்றிக்ஸ் அடிகளின் படைப்புகள் போர்ச்சுகீசிய மொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டமையால், போர்ச்சுகீசியச் சொற்கள் பலவற்றையும் அவரது படைப்புகளில் காணலாம். லவுத்திசுமு, கிரிமாசித்தல், மாத்திரி மோனியு, சாந்திசிமோ சக்கிறமெந்து போன்ற சொற்களை இவ்வகையில் குறிப்பிடலாம். நொபிலியின் படைப்புகளில் மிகுதியான சமஸ்கிருதச் சொற்கள் காணப்படுகின்றன. ஞானோபதேச காண்டம், ஆத்தும நிர்ணயம், புனர்சென்ம ஆட்சேபம், தூஷணதிக்காரம், நித்திய ஜீவன சல்லாபம், ஞானோபதேச குறிப்பிடம் ஆகிய நூல்களின் தலைப்புகளிலேயே சமஸ்கிருதச் சொல்லாட்சிகளைக் காண்கிறோம். இவரது நூல்களில் காணப்படும் சமஸ்கிருதக் கலப்பைப் பற்றி வித்துவான் பண்டார நம்பியார் (1970:154) பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

> தத்துவபோதகர் எழுதிய ஆத்துமநிர்ணயம் போன்ற நூல்கள் மணிப்பிரவாள நடையில் ஆக்கப்பட்டமையாலே அவை தமிழ் மக்களிடையே செல்வாக்குப் பெறவில்லை. தத்துவபோதகரின் வாழ்க்கையைத் துருவி ஆராய்ந்த வீரமாமுனிவர், அவர் நூல்களில் உள்ள குறைகளைக் கண்டிருத்தல் வேண்டும். ஆகையாலேதான், அவர் மணிப்பிரவாள நடையை அறவே விலக்கித் தமிழ் நடையில் நூல்களை எழுதலானார்.

வீரமாமுனிவரைத் தொடர்ந்து, இரேனியசின் விவிலிய மொழி பெயர்ப்பில் சமஸ்கிருதச் சொற்களைத் தவிர்க்கும் முனைப்பைக் காண்கிறோம். ஆயினும் சமஸ்கிருதச் சொற்களைப் பயன்படுத்துவதற்கு 1950 வரை எதிர்ப்பு எதுவும் எழவில்லை.

பக்கங்களுக்கும் விவிலியத்தின் வசன எண்ணைக் குறிப்பிடுவதற்கும் தமிழ் எண்ணுருக்களைப் பயன்படுத்தும் போக்கைத் தொடர்ந்து காண்கிறோம். மணிப்பிரவாள நடைக்கென உருவாக்கப்பட்ட ஷ, ஹ, ஜ, ஸ, க்ஷ போன்ற எழுத்துருக்களையும் கிறித்தவப் படைப்புகளில் காண்கிறோம். இதனையொத்த காலத்தில் அரபுத்தமிழுக்காகப் புதிய எழுத்துக்கள் உருவாக்கப்பட்டன. ள, ழ, ண, ட போன்ற ஒலிகள் அரபுத்தமிழில் காணப்படவில்லை. திருமுறை விளக்கவுரைகளையும் இஸ்லாமியர், அரபுத்தமிழில் எழுதினர். கிரந்த எழுத்துருக்களைத் தவிர்க்கும் போக்கையும் படிப்படியாகக் கிறித்தவப் படைப்புகளில் காண்கிறோம்.

### 2.7.1 சமஸ்கிருதத் தவிர்ப்புணர்வின் தொடக்கம்

இலங்கையில் ஆறுமுகநாவலரின் உதவியோடு பெர்சிவல் மேற்கொண்ட விவிலிய மொழிபெயர்ப்பைத் (1850) தொடர்ந்துதான் சமஸ்கிருதத் தவிர்ப்புணர்வு தொடங்குகிறது. சென்னை வேதாகமச் சங்கம் யாழ்ப்பாண மொழிபெயர்ப்பை நிராகரித்ததற்குச் சொன்ன குற்றச்சாட்டுகளில் ஒன்று, அந்த மொழிபெயர்ப்பில் ஏராளமான சமஸ்கிருதச் சொற்கள் காணப்படுகிறது என்பதாகும். 'இப்படி ஒரு பேச்சு தமிழ் உலகில் எழுந்தது இதுவே முதல்நடவை' எனக் குறிப்பிடுகிறார் சரோஜினி பாக்கியமுத்து (1990:164-65). யாழ்ப்பாண மொழிபெயர்ப்பில், மத்தேயு சுவிசேஷத்தில் காணப்படும் 14,965 சொற்களில் 2994 சொற்கள் சமஸ்கிருதச் சொற்களாக இருந்தன. இதனைத் தொடர்ந்து மேற்கொள்ளப்பட் பவர் மொழிபெயர்ப்பிலும் (1864) 20% சமஸ்கிருதச் சொற்களைக் காண்கிறோம். வின்ஸ்லோ அகராதியில் இடம்பெற்றுள்ள 22,214 அடிப்படைச் சொற்களில் 7944 சொற்கள் சமஸ்கிருத மூலத்தைக் கொண்டவை. இந்த அகராதியில் சமஸ்கிருதச் சொற்களைத் தமிழ்ச் சொற்களிலிருந்து பிரித்துக்காட்ட உடுக்குறி பயன்படுத்தப்பட்டுள்ளது. (ஜெபநேசன் 1983:55) தமிழில் காணப்படும் சமஸ்கிருதச் சொற்களின் கலப்பு 'ஆங்கிலத்தில் ஆங்லோ - சாக்சன் மொழிக்கலப்பை ஒத்தது' என ஜான் லாசரஸ் குறிப்பிடுகிறார். (1878:162) தமிழில் காணப்படும் மூன்றில் ஒரு பங்குக்கும் மேற்பட்ட சொற்கள் சமஸ்கிருதச் சொற்களாக இருக்கின்றன எனவும் ஜான் லாசரஸ் குறிப்பிடுகிறார். இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் எழுதும் தமிழில் 50% சமஸ்கிருதச்

சொற்கள் இருந்ததைப் பேரா. ஏ.சி. செட்டியார் குறிப்பிடுகிறார். (மேற்கோள் : S.V. Shanmugam 1983:17) எ.ஆ. கிருட்டினப்பிள்ளை போன்ற கிறித்தவத் தமிழ்ப் புலவர்கள், செய்யுள் படைப்புகளில் மட்டுமின்றி 'இரட்சணிய சமய நிர்ணயம்' போன்ற உரைநடை நூல்களிலும் சமஸ்கிருதச் சொற்களை மிகுதியாகக் கையாண்டுள்ளனர்.

கிறித்தவப் படைப்பாளர்கள் சமஸ்கிருதச் சொற்களை முதலில் தயக்கமின்றிக் கையாண்டதற்கும் பின்னர், 19ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் சமஸ்கிருதச் சொற்களைத் தவிர்க்க முனைந்ததற்கும் ஐரோப்பியப் பின்புலன்களைக் காணுதல் அவசியம்.

> மிஷனரிகள் முதலில் தமிழ்-சமஸ்கிருதக் கலப்பை ஆங்கில-லத்தின் கலப்போடு ஒப்பிட்டு நோக்கினர். இங்கு சமயப்படைப்புகளில் சமஸ்கிருதம் செல்வாக்கு செலுத்தியது போல, இலத்தீன் செல்வாக்கு ஆங்கிலத்தில் காணப்பட்டது. இந்நிலை 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் மாறத்தொடங்கியது. மக்களின் அன்றாடப் புழக்கத்தில் இல்லாத இலத்தீன் சொற்களைத் தவிர்க்கும் முனைப்பு அங்கு எழுந்தது. மேலும் ஆங்கிலோ-சாக்சன் மொழியின் வேர்ச்சொற்களைக் கண்டறிந்து பயன்படுத்தும் போக்கும் மெல்ல வளரத்தொடங்கியது. இத்தகைய காரணங்களே தமிழ் விவிலிய மொழிபெயர்ப்பில் சமஸ்கிருதத் தவிர்ப்புக்கு அடிகோலியது எனலாம். (ப. டேவிட் பிரபாகர் 1996:20)

தமிழ்மொழியானது மொழியியல் அடிப்படையில் சமஸ்கிருதத்திலிருந்து முற்றிலும் மாறுபட்ட மொழி எனப் பெர்னாட், சிமிட் போன்ற அறிஞர்கள் குறிப்பிட்டதும், கால்டுவெல் தம் புகழ்வாய்ந்த 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' (1856) என்ற நூலை வெளியிட்டதும் இக்காலக்கட்டத்தில்தான்.

பவர் மொழிபெயர்ப்புக்குப் பிறகு லார்சன், மோனகன் ஆகியோர் தலைமைகளில் செய்யப்பட்ட விவிலிய மொழிபெயர்ப்புகளிலும் சமஸ்கிருதச் சொற்களைத் தவிர்க்கும் முனைப்பு காணப்படுகிறதெனினும், சமஸ்கிருதச் சொற்கள்

தொடர்ந்து மிகுதியாகவே காணப்படுகின்றன. மோனகன் மொழிபெயர்ப்புக் குழுவில் இருந்த அருள்தங்கையா தனித்தமிழில் ஈடுபாடு கொண்டவர். ஆயினும் அப்பொழுது பேராயராகவிருந்த அசரியாவும், வேறு சில உறுப்பினர்களும் சமஸ்கிருதச் சொற்களை நீக்கவேண்டியதில்லை என்று வாதாடி வெற்றிபெற்றனர்.

விவிலிய மொழிபெயர்ப்பு வரலாற்றில் 1850ஆம் ஆண்டிலேயே சமஸ்கிருத எதிர்ப்பு தோற்றம் கொண்டபோதிலும், இன்றளவும் பவர்மொழிபெயர்ப்பின் செல்வாக்கு காரணமாகச் சீர்திருத்த மரபினரிடையே சமஸ்கிருதத்தின் செல்வாக்கை இன்றளவும் காண்கிறோம்.

விருத்தசேதனம், விசுவாசம், ஞானஸ்நானம், ஜெபம், இராப்போஜனம் போன்ற சமய முக்கியத்துவம் வாய்ந்த சொற்கள் மட்டுமன்றி, விருட்சம், ஜலம், நித்திரை, பிதா, காரியம், ஊழியம், சபை, பொக்கிஷம், சமாதானம், புருஷன், சுத்தம், சிரசு, கீர்த்தி, ஜனம், புஷ்பம், அக்கினி, தேசம் போன்ற சாதாரணச் சொற்களும் சமஸ்கிருதச் சொற்களாக இருப்பது பவர் மொழிபெயர்ப்பின் தன்மையாக உள்ளது.

### 2.7.2 சமஸ்கிருதத் தவிர்ப்பு : இற்றை நிலை

கடந்த 25 ஆண்டுகளில் வெளிவந்த விவிலிய மொழிபெயர்ப்புகளிலும், வழிபாட்டு முறைகளிலும், அருளுரைகளிலும் சமஸ்கிருதத் தவிர்ப்பு தெளிவாக மேற்கொள்ளப்பட்டு வருவதைக் காண்கிறோம். தே. இராஜரீகத்தின் விவிலிய மொழிபெயர்ப்பும் (1979), அண்மையில் வெளிவந்துள்ள பொது மொழிபெயர்ப்பும் (1995) இவ்வகையில் குறிப்பிடத்தக்கவை. இவை தற்காலத் தமிழ் நடையில் அமைந்துள்ளன.

பவர், இராஜரீகம் ஆகியோரது மொழிபெயர்ப்புகளை ஒப்பிட்டு நோக்கும்போது சமஸ்கிருதச் சொற்களைத் தவிர்க்கும் போக்கு கிறித்தவத் தமிழில் உருவாகிவரும் நிலையைத் தெளிவாகக் காணலாம். பவர் மொழிபெயர்ப்பில் பயன்படுத்தப்பட்ட ஸ, ஷ, ஜ ஆகிய கிரந்த எழுத்துக்கள் கூட இராஜரீகம் மொழிபெயர்ப்பில் தவிர்க்கப்பட்டுள்ளன. 'ஸ்' மட்டும் குறிப்பிட்ட சில சொற்களில் கையாளப்பட்டுள்ளது. அதுவும் மொழிமுதலிலும், மொழியிறுதியிலும் தவிர்க்கப்பட்டுள்ளது.

பவர் மொழிபெயர்ப்பில் காணப்படும் சமஸ்கிருதச் சொற்கள் மூன்று வகையில் இராஜரீகத்தின் மொழிபெயர்ப்பில் அமைவதைக் காணலாம். (ப. டேவிட் பிரபாகர் 1987)

1. கிரந்த எழுத்துக்களை நீக்கித் தமிழில் ஒலிபெயர்ப்பு செய்யப்பட்ட சொற்கள்.

எ.கா :

| பவர் (1864) | இராஜரீகம் (1979) |
|---|---|
| சீஷர் | சீடர் |
| மனுஷர் | மனிதர் |
| போவாஸ் | போவாசு |

2. தமிழில் மொழிபெயர்த்துக் கொள்ளப்பட்ட சமஸ்கிருதச் சொற்கள்

எ.கா :

| பவர் (1864) | இராஜரீகம் (1979) |
|---|---|
| ஜலம் | தண்ணீர் |
| ஜனம் | மக்கள் |
| அர்த்தம் | பொருள் |
| தேசம் | நாடு |
| சிரசு | தலை |
| சுத்த | தூய |
| புருஷன் | கணவர் |

3. மிகச் சில இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ள எளிமையான மாற்றுச் சமஸ்கிருதச் சொற்கள்.

எ.கா :

| பவர் (1864) | இராஜரீகம் (1979) |
|---|---|
| உபதேசித்து | போதித்து |
| சாஸ்திரி | ஞானி |

அண்மையில் வெளிவந்துள்ள பொது மொழிபெயர்ப்பில் (1995) இராஜரீகம் மொழிபெயர்ப்பில் காணப்படும் சமஸ்கிருதச் சொற்களும் கூடத் தமிழாக்கப்பட்டிருக்கின்றன.

எ.கா :

உபதேசித்து (பவர்)



போதித்து (இராஜரீகம்)



கற்பித்து (கற்பித்தவை) (பொது மொழிபெயர்ப்பு) (மத். 5:12)

வேதபாரகர் (பவர்)



நீதிவேத அறிஞர் (இராஜரீகம்)



மறைநூல் அறிஞர் (பொது மொழிபெயர்ப்பு) (மத். 5:20)

தற்கால விவிலிய மொழிபெயர்ப்புகளிலும் சமஸ்கிருதத்தைத் தவிர்க்கும் போக்கு காணப்பட்ட போதிலும், நடைமுறையில் இம்மாற்றம் கிறித்தவர்களால் பின்பற்றப்படவில்லை. பவர் மொழிபெயர்ப்பின் செல்வாக்கு குறைந்து, பொதுமொழிபெயர்ப்பு பரவலாகப் பயன்படுத்தப்படும்பொழுது கிறித்தவத் தமிழில் மாற்றங்கள் நிகழலாம்.

தமிழில் காலந்தோறும் ஏற்பட்டுவந்துள்ள பல்வேறு மாற்றங்களை உள்ளடக்கியதாக விவிலிய மொழிபெயர்ப்புகள் அமைந்துள்ளன. விவிலியத்தின் ஒரு குறிப்பிட்ட வசனம் (லூக்கா (16:19) பல்வேறு காலக்கட்டங்களில் மொழிபெயர்க்கப்பட்டுள்ள பாங்கினைப் பின்வரும் பகுதி தெளிவாக உணர்த்துகிறது. இதனைச் சபாபதி குலேந்திரன் தம் நூலிலும் எடுத்துக் காட்டியுள்ளார்.

## 18ஆம் நூற்றாண்டு

அயிசூரியமுடைத்தானாயிருக்கிய யாதொரு மனுஷன் உண்டாயிருந்தான். அவன் சகலாத்துக்களையும்

விலையேறப்பெத்த பிடவைகளையும் தரிச்சிக் கொண்டு அனுதினமும் சந்தோஷப்பட்டுப் பிறுதாபிச்சுக் கொண்டிருந்தான்
(சீகன்பால்கு - 1714)

ஐசுவரியமுள்ள ஒரு மனுஷன் இருந்தான். அவன் இரத்தாம்பரமும் விலையேறப்பெற்ற புடவையுந் தரித்துக்கொண்டு, அநுதினமுஞ் சம்பிரமாய் வாழ்ந்திருந்தான்
(பெப்ரீஷியஸ் - 1774)

## 19ஆம் நூற்றாண்டு

இரத்தாம்பரமும் மெல்லிய வஸ்திரமுந்தரித்த ஒரு ஐசுவரியவான் அனுதினமும் சம்பிரமாய் வாழ்ந்திருந்தான்
(பெர்சிவல் - 1850)

ஐசுவரியமுள்ள ஒரு மனுஷன் இருந்தான்; அவன் இரத்தாம்பரமும் விலையேறப்பெற்ற வஸ்திரமும் தரித்து, அநுதினமும் சம்பிரமாய் வாழ்ந்து கொண்டிருந்தான்
(பவர் - 1864)

## 20 ஆம் நூற்றாண்டு

தனவந்தனான மனிதன் ஒருவன் இருந்தான்; அவன் செந்நிற ஆடையும் நார்ப்பட்டும் உடுத்திக் கொண்டு நாள்தோறும் உண்டு களித்துச் சம்பூரணமாய் வாழ்ந்து வந்தான்
(1967)

செல்வமுடைய மனிதன் ஒருவன் இருந்தான். அவன் செந்நிற உடையும் பட்டாடையும் அணிந்துகொண்டு நாள்தோறும் உண்டு களித்து வளமாய் வாழ்ந்து வந்தான்
(இராஜரீகம் - 1979)

செல்வர் ஒருவர் இருந்தார். அவர் விலையுயர்ந்த மெல்லிய செந்நிற ஆடை அணிந்து நாள்தோறும் விருந்துண்டு இன்புற்றிருந்தார்
(பொது மொழிபெயர்ப்பு - 1995)

விலையுயர்ந்த ஆடைகளை எப்பொழுதும் அணிந்து கொண்டிருந்த ஒரு செல்வந்தன் இருந்தான். ஒவ்வொரு நாளும் விருந்துண்டு களிக்கும் அளவுக்கு மிகுந்த செல்வந்தனாக இருந்தான்
(பரிசுத்த பைபிள் [WBTC], 1998)

படிப்படியாகச் சமஸ்கிருதச் சொற்களும் வழக்கொழிந்த சொற்களும் தவிர்க்கப்பட்டுள்ளமையும், எளிய இக்காலத் தமிழ் நடையையொட்டியதாக மொழிபெயர்ப்பின் போக்குகள் அமைவதையும் மேற்காணும் பகுதி நமக்குக் காட்டுகிறது. மொழிநடையில் காணப்படும் இத்தகைய மாற்றங்களை மொழிபெயர்ப்பாளர்களின் தனிப்பட்ட நடையியற் பண்பாகக் கருத இயலாது. மாறாகத், தமிழ்ச் சூழலில் மொழியின் பாற்பட்ட மனப்பாங்கில் ஏற்பட்ட மாற்றங்களாக இதனைக் கருதவேண்டும்.

20ஆம் நூற்றாண்டில் எழுந்த மொழிபெயர்ப்புகள் பரவலாகப் பயன்படுத்தப்படாத நிலையும், 19ஆம் நூற்றாண்டுக் 'கிறித்தவத் தமிழ் நடை' மீது தற்காலக் கிறித்தவர்கள் கொண்டுள்ள வழிபாட்டுணர்வும் 'கிறித்தவத் தமிழின்' செல்வாக்கிற்குக் காரணங்களாக அமைகின்றன.

இயல் 3

# கிறித்தவத் தமிழ்க் கூறுகள்

கிறித்தவச் சமயப் பனுவல்களிலும், வழிபாட்டு முறைகளிலும் கிறித்தவத் தமிழக் கூறுகளை எளிதாக அடையாளம் காண இயலும். சமயச் சூழலில் மட்டுமன்றிச் சாதாரணமாகப் பங்கேற்கிற பிற சமூகச் சூழல்களிலும் கிறித்தவர் பலரது பேச்சில் கிறித்தவத் தமிழ்க் கூறுகள் இடம் பெறுகின்றன.

கலைச் சொற்கள், இலக்கணக் கூறுகள், சில சிறப்பு வழக்குகள், கருத்துப் படிமங்கள், மரபுத் தொடர்கள் போன்றவை மட்டுமன்றிக் கருத்தாடல் அமைப்பும் (Discourse Structure) கிறித்தவத் தமிழின் தனித்தன்மைக்குக் காரணமாக அமைகின்றன.

## 3.1 கலைச் சொற்கள்

16ஆம் நூற்றாண்டு தொடங்கிக் கிறித்தவ வழிபாட்டு நூல்களும், விவிலியப் பகுதிகளும் தமிழில் வெளிவரத் தொடங்கின. இதற்கு ஏராளமான கலைச் சொற்களைத் தமிழில் ஆக்கிக் கொள்ளவேண்டிய தேவை ஏற்பட்டது. ஒலிபெயர்ப்பு, மொழிபெயர்ப்பு, வழக்கிலுள்ள சொற்களைப் புதிய பொருளில் பயன்படுத்துதல் முதலிய முறைகளில் கலைச் சொற்கள் ஆக்கிக் கொள்ளப்பட்டன.

பெரும்பான்மையான பனுவல்கள் கிரேக்க, எபிரேய மூலத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்டமையால், அடிப்படையான சில கலைச்சொற்கள் தமிழில் ஒலிபெயர்த்துத் தரப்பட்டன. மொழிபெயர்க்கப்பட்ட பெரும்பான்மையான சொற்கள் சமஸ்கிருதச் சொற்களாகவிருந்தன. 19ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரை இந்நிலை நீடித்தது. சமயஞ் சார்ந்த படைப்புகளில் சமஸ்கிருதத்தின் செல்வாக்கு மிக்கிருந்த சமகாலப் போக்கே இதற்குக் காரணம். சமயம் சார்ந்த கலைச்சொற்கள் மட்டுமன்றி, சாதாரணச் சொற்களையும் கூடச் சமஸ்கிருதத்தில் ஆக்கிக் கொள்வது அப்பொழுது பெருவழக்காக இருந்தது. இந்நிலை பின்னர் மாறத் தொடங்கிற்று. பின்வரும் மூன்று வகைகளில் கலைச் சொற்களைப் பகுத்து காணலாம்.

முதல் வகை

கிரேக்க, எபிரேய, போர்ச்சுகீசிய மூலத்திலிருந்து ஒலிபெயர்த்துக் கொள்ளப்பட்ட சொற்கள். எ.கா: ஓசன்னா, ஆமென், அல்லேலுயா, பஸ்கா, லவுத்திசிமு மற்றும் இயற்பெயர்கள், இடப்பெயர்கள், அளவைப் பெயர்கள் முதலியன.

இரண்டாம் வகை

அ) சமஸ்கிருதத்தில் ஆக்கிக் கொள்ளப்பட்ட கலைச் சொற்கள். எ.கா: நித்திய ஜீவன், ஞானஸ்நானம், விசுவாசம், இரட்சிப்பு, இராப்போஜனம், சுவிசேஷம், மாம்சம்.

ஆ) சமஸ்கிருதத்தில் ஆக்கிக் கொள்ளப்பட்ட சாதாரணச் சொற்கள். எ.கா: பிதா, சீஷர், காரியம், விசேஷம், அப்பம், ஜலம், சத்துரு.

மூன்றாம் வகை

புதுப்பொருளில் ஆக்கிக் கொள்ளப்பட்ட கலைச்சொற்கள் எ.கா: ஓலை வாசித்தல், புது நன்மை, நற்கருணை (இராப் போஜனத்திற்கு மாற்று) ஓய்வு நாள், திருப்பலி.

கலைச்சொற்களைப் பயன்படுத்தும் முறையிலும், ஒன்றுக்கு மேற்பட்ட போக்குகள் கிறித்தவரிடையே காணப்படுகின்றன. இதற்குக் கால மாற்றமும், மொழி பற்றிய நோக்கு நிலையும் காரணமாகும்.

### 3.1.1 கடவுள் பெயர்

கடவுளைக் குறிக்கப் பல பொதுப்பெயர்களைக் கிறித்தவர்கள் பயன்படுத்தியுள்ளனர். ஆயினும், விவிலிய மொழிபெயர்ப்புகளில் கடவுளின் பொதுப்பெயரைப் பயன்படுத்தும்பொழுது, குறிப்பிட்ட சில சொற்களை வரையறுத்துப் பயன்படுத்துவதைக் காண்கிறோம். தம்பிரான், சர்வேசுரன், பராபரன், கர்த்தர், தேவன், கடவுள் ஆகிய சொற்கள் இவ்வகையில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

தம்பிரான்

16ஆம் நூற்றாண்டில் தமிழில் எழுதப்பட்ட போர்ச்சுக்கீசியரின் வழிபாட்டு நூல்களில் தம்பிரான் என்ற சொல் ஆளப்பட்டுள்ளது. இயேசு சபையைச் சேர்ந்த அன்றிக்ஸ் அடிகள்

தம் நூலின் தலைப்பிலேயே (தம்பிரான் வணக்கம் - 1557) இச்சொல்லைக் கடவுளைக் குறிக்கப் பயன்படுத்தியுள்ளார். தன்+பிரான்= தன்னுடைய அல்லது எல்லோருடைய தலைவன் என்ற பொருளில் இச்சொல் ஆளப்பட்டது. பின்னர் வந்தவர்கள் இச்சொல்லைப் போற்றிக் கொள்ளவில்லை.

### சர்வேசுவரன்

17ஆம் நூற்றாண்டில் ராபர்ட்-டி-நொபிலி சர்வேசுவரன் என்ற சொல்லைக் கையாண்டார். இன்றளவும் ரோமன் கத்தோலிக்க சபையினரிடையே இச்சொல் வழக்கில் இருக்கக் காண்கிறோம். முதன்முதலில் புதிய ஏற்பாட்டை முழுமையாகத் தமிழில் மொழிபெயர்த்த சீர்திருத்த சபையைச் சார்ந்த சீகன்பால்கும் (1714) சர்வேசுவரன் என்ற சொல்லைக் கத்தோலிக்கரைப் பின்பற்றிப் பயன்படுத்தியுள்ளார். 18ஆம் நூற்றாண்டில் இலங்கையில் ஒல்லாந்தரும் சீகன்பால்கைப் பின்பற்றி இச்சொல்லைப் பயன்படுத்தினார்.

எபிரேய மொழியில் கடவுளைக் குறிக்கும் 'ஏலோஹீம்' என்ற சொல்லுக்கு இணையாகச் 'சருவேசுவரன்' என்ற சொல் ஆளப்பட்டதாகத் தெரிகிறது. கடவுளைக் குறிக்கும் இன்னொரு சொல்லான 'யாவே' என்ற சொல்லுக்கு இணையாகக் 'கர்த்தர்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டது. 'யாவே' என்பதே ஒலி மாற்றங்களுடன் யெகோவோ என வழங்கப்படுகிறது.

### பராபரன்

'பராபரவஸ்து' என்ற சொல்லாட்சியை டி-நொபிலியும், சீகன்பால்கும் பயன்படுத்தியுள்ளனர். ஆயினும் விவிலிய மொழிபெயர்ப்பில் *'பராபரன்' என்ற சொல்லை எர்னெஸ்ட் உவால்தர் (1741) என்னும் தரங்கம்பாடி மிஷனரி முதலில்

---

* இந்த வடமொழிச் சொல் பரம்+அபரம் என்று விரியும். இதன் தமிழ்ச் சமன்பாடு 'கடவுள்' ஆகும். அது கட+உள் என்று விரியும். அனைத்தையும் கடந்த ஆனால் உள்ளேயும் உறைகிற trancendent என்ற பொருளைத் தரும். பர என்பது பரம்பொருள். பரவெளி, பரமண்டலம் என்ற சொற்களின் முற்பகுதியின் பொருளையுடையது. remote. heavenly. Unlimited, extend என்ற அர்த்தங்களைத் தரக்கூடியது. அபரம் என்பது அதன் எதிர்ப்பதம்; பொறிகளாலறியப்படுவது, limited, notremote என்ற அர்த்தங்களைத் தரும் (சரோஜினி பாக்கியமுத்து 1990:88).

பயன்படுத்தியதாகத் தெரிகிறது (சபாபதி குலேந்திரன் 1967:62). இவர் தாயுமானவரின் சமகாலத்தவர். தாயுமானவர் பயன்படுத்திய 'பராபரம்' என்ற சொல்லுக்கு 'அன்' விகுதி கொடுத்துப் பராபரன் என ஆளப்பட்டது. பெப்ரீஷியசும் (1772-96) தம் விவிலிய மொழிபெயர்ப்பில் இச்சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். இரேனியசும் (1872-33) பராபரன் என்ற சொல்லையே தம் விவிலிய மொழிபெயர்ப்பில் பயன்படுத்தினார். பெப்ரீஷியஸ் மொழிபெயர்ப்பைப் போற்றும் லுத்தரன் சபையினர் இன்றளவும் பராபரன் என்ற சொல்லை அதிகம் கையாளக் காண்கிறோம். வேதநாயக சாஸ்திரியாரும் தம் படைப்புகளில் பல இடங்களில் இச்சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். 'பராபரன் மாலை', 'பராபரக் கண்ணி' என்ற பெயர்களில் நூல்களையும் படைத்துள்ளார்.

**தேவன்**

தேவன் என்ற சொல் 'Deva' என்ற சமஸ்கிருத மூலத்தையும், 'ஒளிரும் வான்' என்ற பொருள் கொண்ட 'deus' என்ற லத்தீன் மூலத்தையும் கொண்டு உருவாக்கப்பட்டது. 'தே' என்ற வேர்ச்சொல் 'ஒளி' என்ற பொருளுடையது. யாழ்ப்பாணத்தில் செய்யப்பட்ட பரிசோதனை மொழிபெயர்ப்பில்தான் (1850) 'தேவன்' என்ற சொல் 'பராபரன்' என்ற சொல்லுக்கு மாற்றாகப் பயன்படுத்தப்பட்டது. இலங்கைத் தமிழறிஞர் ஆறுமுக நாவலரின் உதவியோடு பெர்சிவல் மேற்கொண்ட மொழிபெயர்ப்பு இது. ஆயினும் இச்சொல்லைப் பயன்படுத்துவதை லுத்தரன் சபையினர் இன்றளவும் தவிர்த்து வருகின்றனர். இதுபற்றி சரோஜினி பாக்கியமுத்து பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

> "இத்தனை ஆண்டுகளாகியும் தேவன் என்ற இந்தச் சொல், தமிழ்க் கிறித்தவப் பண்பாட்டிலும் அவர்களது சாதாரணப் பேச்சு வழக்கிலும் ஒட்டவில்லை. சொல் தமிழில் செழித்து ஒன்றிப்போய் இருக்கிறது என்று சொல்ல முடியாது. சமய மொழியில் பிரசங்கம் நிகழ்த்துவோரும், எழுதுவோரும் மாத்திரமே அச்சொல்லைப் பயன்படுத்துகின்றனர். கடிதங்கள் எழுதும் போதும் ஒரு சிலர் பயன்படுத்துகின்றனர். மற்றபடி சாதாரணப் பேச்சு வழக்கில் கிறிஸ்தவ மக்கள் அதைப் பயன்படுத்துகிறதில்லை. ஒரே கடவுளைக்

குறிக்க அவர்கள் ஆண்டவர், கடவுள், சாமி, தெய்வம் என்ற சொற்களைத் தான் பொதுவாகப் பயன்படுத்துகின்றனர். மேற்கண்ட நான்கு சொற்களும் இந்துக்களுக்கும் பொதுவானவையே"

(சரோஜினி பாக்கியமுத்து 1990:180)

**கடவுள்**

லார்சன் மொழிபெயர்ப்பிலும் (1528-36), மோனகன் மொழிபெயர்ப்பிலும் (1941-49) கடவுள் என்ற சொல் தேவனுக்கு மாற்றாகப் பயன்படுத்தப்பட்டது. அண்மையில் வெளிவந்துள்ள பொது மொழிபெயர்ப்பில் 'கடவுள்' என்ற சொல் ஆளப்பட்டுள்ளது. இச்சொல் தமிழில் மட்டுமே காணப்படுகிற சொல்லாகும். தொல்காப்பியத்தில் இச்சொல் பயின்று வருகிறது (தொல்.கற்பியல். நூற்பா 144). இச்சொல் பெயர்ச்சொல் அன்று; கட, உள் எனும் ஏவல் வினைகளால் ஆனது என நிர்மல் செல்வமணி குறிப்பிடுகிறார் (ஞான இராபின்சான் 1985). 'கடவுள் என்பது கடந்து நிற்பது அல்லது கடந்து உள்ளமை அல்லது கடந்து உளதாயிருத்தல், கடந்து உள் நிற்றல், கடவுவது அல்லது செலுத்துவது என்ற பொருட்களுடைத்து' என்ற இரா. இளங்குமரனின் விளக்கத்தையும் நிர்மல் செல்வமணி எடுத்துக் காட்டியுள்ளார்.

**கர்த்தர், ஆண்டவர், இறைவன் முதலிய சொற்கள்**

எபிரேய 'யாவே' என்ற சொல்லைச் சீகன்பால்கு "கர்த்தர்" என்று மொழிபெயர்த்துப் பயன்படுத்தினார். இச்சொல் பழைய ஏற்பாட்டில் 6661 முறை பயன்படுத்தப்பட்டுள்ளது. பவர் மொழிபெயர்ப்பில் இச்சொல் வருமிடங்களிலெல்லாம் கொட்டை எழுத்தில் அச்சிடப்பட்டுள்ளது. பெப்ரீஷியஸ் காலத்திலிருந்தே (1772-96) இவ்வாறு அச்சிடும் மரபு உள்ளது. கடவுளைக் குறிக்கப் பல சொற்களைக் கிறித்தவர் பயன்படுத்தி வந்துள்ள போதிலும், 'கர்த்தர்' என்ற சொல்லாட்சியே இக்காலத் தமிழில் கிறித்துவைக் குறிப்பிட, பிற சமயத்தவரால் பயன்படுத்தப்படும் சொல்லாக வழங்குவதைக் காண்கிறோம். இதற்கான காரணம் புலப்படவில்லை.

ஆண்டவர், இறைவன் ஆகிய சொற்களும் கிறித்தவர்களால் கடவுளைக் குறிக்கப் பொதுவாகப் பயன்படுத்தப்படுகின்றன. இச்

சொற்கள் வழிபாட்டு முறையிலும், விவிலிய மொழிபெயர்ப்புகளிலும் ஆளப்பட்டுப் பரவலாகப் பயன்படுத்தப்படுவதைக் காண்கிறோம். கடவுளைக் குறிக்க இரண்டு பொதுப்பெயர்களை இணைத்து வழங்குவதையும் காணமுடிகிறது. 'ஆண்டவராகிய கடவுள்' என்ற பயன்பாட்டைக் கத்தோலிக்கர் மொழிபெயர்ப்பிலும், பொது மொழிபெயர்ப்பிலும், இதற்கு இணையாகத் 'தேவனாகிய கர்த்தர்' என்ற பயன்பாட்டைப் பவர் மொழிபெயர்ப்பிலும் காணுகிறோம். கடவுளைக் குறிக்க ஒன்றுக்கு மேற்பட்ட பெயர்கள் எபிரேய மொழியில் வழங்கப்படுவதே இதற்குக் காரணம். கிரேக்க மொழியில் கடவுளைக் குறிக்க வேறு சொற்கள் பயன்படுத்தப்பட்டன. இவ்விரு மொழி மூலங்களையும் தழுவி விவிலியம் தமிழில் செய்யப்பட்டுள்ளதால் இத்தகைய போக்கைக் காண்கிறோம்.

விவிலிய மொழிபெயர்ப்பாளர்களும், வழிபாட்டு முறைகளைத் தமிழில் எழுதியவர்களும் கடவுள் குறித்த பொதுப் பெயர்களை வரையறுத்துப் பயன்படுத்தியுள்ளனர். எனினும் கிறித்தவப் புலவர்களுக்கு அத்தகைய கட்டுப்பாடு இல்லை. அவர்கள் இந்து சமய மரபுக்குட்பட்டுப் பல பெயர்களால் கடவுளைச் சுட்டியுள்ளனர். கிறித்தவ வழிபாட்டில் பயன்படுத்தப்படும் கீர்த்தனைகளில் பின்வரும் பெயர்கள் கடவுளைச் சுட்டப் பயன்படுத்தப்பட்டுள்ளன. அதிகாரி, அகில பிரகாசன், அசரீரி, அருவுரு, அரூப சொரூபி, அல்பா ஓமேகா, அனாதி, அனுகூலன், ஈசன், பாதகம் கடாத்திரன், கருணா சமுத்திரன், கலைக்கியோன், கிருபாசனன், குணாளன், சச்சிதானந்தம், சத்தாய், சதாநந்தம், சர்வாதிகாரன், சருவேசன், சற்குரு, சித்தாய், தயாதிபன், ஞான பாலன், ஞானாகரன், தட்சகன், தயாபரன், தாவீது குமரன், திரித்துவன், தீபன், தேசிகன், துரை, தேவசுதன், தேற்றரவாளன், நாதன், நித்தன், நித்திய சங்கீதன், நிராகரன், நிராயுதன், நிஷ்களன், பத்துலட்சணத்தன், பவத்தினாசன், பவமோசன், பானு, புங்கவன், பூபதி, மனுவேல், மானுவேல், மாக மண்டல விலாசன், விமலன், வியாபகன்.

இவற்றுள், ஆல்பா ஒமேகா, தாவீது குமரன், தேற்றரவாளன், மனுவேல் போன்ற பெயர்கள் கிரேக்க, லத்தீன், எபிரேய மூலங்களைக் கொண்டவை. திரித்துவன் என்பது மூவருள் ஒருவராக விளங்கும் கடவுளின் தன்மையைக் குறிப்பது.

கிறித்துவைச் சுட்டுவதற்குச் சச்சிதானந்தம், பத்து லட்சணத்தன் போன்ற பெயர்களின் பொருத்தப்பாட்டையும் கிறித்தவ அறிஞர்கள் விளக்கியுள்ளனர். 'சத்' என்பது இறைவனின் இருக்கும் தன்மையையும், 'சித்' என்பது பழைய ஏற்பாட்டின் 'வார்த்தைக் (Word) கருத்தையும், புதிய ஏற்பாட்டின் 'வார்த்தைக் (logos) கருத்தையும் இணைத்து இறைவனின் பேரறிவுத் தன்மையையும், 'ஆனந்தம்' என்பது தூய ஆவியானவரின் சிறப்புப் பண்பாகிய மகிழ்ச்சி, அன்பு என்பனவற்றையும் சுட்டுவதாகக் குறிப்பிட்டுள்ளனர். இதுபோன்றே, கடவுள் பத்து லட்சணங்களாகப் பின்வருவனவற்றை வேதநாயகம் சாஸ்திரியார் குறிப்பிடுகிறார். ஆதியந்தமில்லாதவன், மாறாதவர், சருவத்துக்கும் வல்லவர், எல்லாம் அறிந்தவர், அளவற்ற ஞானமுள்ளவர், எங்கும் நிறைந்திருப்பவர், சத்தியமுள்ளவர், பரிசுத்தமுள்ளவர், நீதியுள்ளவர், நன்மையும் கிருபையும் உள்ளவர்.

### *3.1.2* விவிலியத்தைச் சுட்டும் பெயர்கள்

விவிலியத்தைச் சுட்டுவதற்கு ஒன்றுக்கும் மேற்பட்ட சொற்கள் கிறித்தவத் தமிழில் பயன்படுத்தப்பட்டுள்ளன. பைபிள், மறை, வேதம், விவிலியம் போன்ற சொற்களும் சத்திய, திரு, பரிசத்த ஆகிய அடைகளோடு சத்திய வேதம், திரு விவிலியம், பரிசுத்த வேதாகமம் போன்ற தொடர்களும், வேதாகமம் (வேதம் + ஆகமம்) எனும் தொகையும் விவிலியத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

இவற்றுள் 'பரிசுத்த வேதாகமம்' என்ற பெயரில் அச்சிடப்பட்ட வேதாகமமே பெரும்பாலும் வழக்கில் உள்ளது. அண்மையில் வெளிவந்துள்ள விவிலிய பொது மொழிபெயர்ப்பு 'திரு விவிலியம் என்ற பெயரைக் கொண்டுள்ளது. பின்லாந்து வணிகர்கள் 'பைப்ர' என்ற கோரைப் புல்லின் பட்டையைக் கிரேக்கத்திற்கு அறிமுகம் செய்தனர். இது எழுதுவதற்குத் தாள் போலப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்தப் பட்டைகள் 'பீப்லாசு' என்ற மத்தியதரைக்கடல் பட்டினத்திலிருந்து இறகுக்குமதியானதால் இடவாகு பெயராக பீபிலாசு, பீபிலா எனக் குறிப்பிடப்பட்டுத் தொடக்கத்தில் பொதுவாக நூலையும், பின்னர்ச் சிறப்பாகப் பைபிளையும் குறித்தது. இது தமிழ் ஒலிபெயர்ப்புக்கேற்ப 'விவிலியம் என அமைந்தது.

வேதம் என்ற சொல் 'அறிவு அல்லது அறியப்பட்டது' என்று பொருள்பாடும். 'வித்' என்ற சொல்லின் அடியாகப் பிறந்தது. ஆகமம் என்ற சொல் 'மனு' முதலிய நூல்களைக் குறிப்பதைத் தண்டியலங்காரம் சுட்டுகிறது (தண்டியலங்காரம் 121).

'ஆகமம்' என்பது (ஆ = பசு, ஆன்மா; கமம் = வந்து சேருதல்) ஆன்மா இறைவனிடம் வந்து சேருதலைப் பற்றிக் கூறும் நூல் எனப் பொருள்படுவதையும், 'ஆகமம்' என்பது மந்திர தந்திர நூல்களையும் குறிக்கும் வழக்கு தமிழில் காணப்படுவதையும் வீ.ப.கா. சுந்தரம் (1982:62) எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார்.

'மறை' எனும் சொல் மறை பொருளாக இருப்பது என்று கருதப்படாமல், 'மறுத்து நிற்பது', பாவங்கள் இவையிவை என மறுப்பது என்ற பொருளில் கிறித்தவர்களால் பயன்படுத்தப்படுகிறது. மறை, வேதம், ஆகமம் முதலிய சொற்கள் தனியாகவும், திரு, சத்திய முதலிய அடைகளோடு சேர்ந்தும் பயன்படுத்தப்பட்டிருப்பினும், 'திருவிவிலியம்' என்ற சொல்லாட்சியைத் தரப்படுத்தி இப்பொழுது வழங்கி வருவதைக் காண்கிறோம்.

விவிலியத்தின் இரு பெரும் பகுதிகள் முறையே, 'பழைய ஏற்பாடு', 'புதிய ஏற்பாடு' என வழங்கப்படுகின்றன. பழைய ஏற்பாட்டின் பெரும்பான்மையான பகுதிகள் கத்தோலிக்க மொழிபெயர்ப்பில் 'ஆகமம்' என்றே வழங்கப்பட்டுள்ளன. சீர்திருத்தப் பிரிவினர் பஞ்சாகமங்கள் எனப்படும் முதல் ஐந்து நூல்களை மட்டுமே ஆகமம் என்ற சொல்லால் அழைக்கின்றனர். கத்தோலிக்கர் மொழிபெயர்ப்பில் அரசர் ஆகமம் எனப்படுவது சீர்திருத்தப் பிரிவினரின் மொழிபெயர்ப்பில் 'ராஜாக்கள்' எனப்படுகிறது. உன்னதசங்கீதம் உன்னதப்பாட்டு எனப்படுகிறது.

மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் ஆகிய இயேசுவின் சீடர்கள் எழுதிய புதிய ஏற்பாட்டுப் பகுதிகள் 'சுவிசேஷம்' என்ற பெயரிலும், இறைத் தொண்டரான பவுலடியார் பல்வேறு சபைகளுக்கு எழுதிய கடிதங்கள் 'நிருபப் பகுதிகள்' என்றும் 'நிருப வாக்கியம்' என்றும் அழைக்கப்படும் மரபைக் காண்கிறோம். 'ஆதியாகமம்' பொது மொழிபெயர்ப்பில் 'தொடக்க நூல்' எனச் சுட்டப்படுகிறது. யாத்திராகமம் 'விடுதலைப் பயணம்' எனவும்,

உபாகமம் 'இறைச்சட்டம்' எனவும், நாளாகமம் 'குறிப்பேடு' எனவும், சங்கீதம் 'திருப்பாடல்' எனவும் பொது மொழிபெயர்ப்பில் குறிப்பிடப்படுகின்றன.

'சுவிசேஷப் பகுதிகள்' தற்பொழுது 'நற்செய்தி நூல்கள்' எனப் பரவலாக வழங்கப்படுகின்றன. மோனகன் தம் விவிலிய மொழிபெயர்ப்பில் 'அருட்செய்தி நூல்' எனக் குறிப்பிட்டுள்ளார். நிருபப் பகுதிகள் 'கடிதம்' (ராஜரீகம் மொழிபெயர்ப்பு) 'திருமுகம்' (கத்தோலிக்க மொழிபெயர்ப்பு, பொது மொழிபெயர்ப்பு) எனக் குறிப்பிடப்படுகின்றன. 'அப்போஸ்தலர் நடபடிகள்' திருத்தூதுவர் செயல்கள் (ராஜரீகம் மொழிபெயர்ப்பு) திருத்தூதுவர் பணிகள் (பொது மொழிபெயர்ப்பு) எனக் குறிப்பிடப்படுகின்றது. இறுதி நூலான 'வெளிப்படுத்தின விசேஷம்' திருவெளிப்பாடு (ராஜரீகம் & கத்தோலிக்க மொழி பெயர்ப்பு & பொது மொழிபெயர்ப்பு) எனக் குறிப்பிடப்படுகின்றது. பெப்ரீஷியஸ் தம் விவிலிய மொழிபெயர்ப்பில் இதனை 'அறிவிப்பு' எனக் குறிப்பிட்டுள்ளார்.

### 3.1.3 பெயர்கள்

விவிலியத்தில் மாந்தர்தம் பெயர்கள், இடப்பெயர்கள், அளவைப்பெயர்கள் முதலிய சொற்கள் பெரும்பாலும் ஒலிபெயர்த்து வழங்கப்பட்டுள்ளன. சில பெயர்களைக் கத்தோலிக்க மரபில் மொழிபெயர்த்து வழங்கக் காண்கிறோம். எ.கா. பேதுரு - இராயப்பர், யோவான் - அருளப்பர், பவுல் - சின்னப்பர், யாக்கோபு - யாகப்பர், அந்திரேயா - பெலவேந்திரர் முதலிய பெயர்கள் இவ்வகையில் குறிப்பிடத்தக்கவை (அ. டேனியல் **1989:66**).

பவர் 'மாற்கு' எனவும், மோனகன், லார்சன் ஆகியோர் 'மார்க்கு' எனவும் ஒலிபெயர்த்துள்ளனர். இலங்கை ஒல்லாந்தர் படைப்புகளில் பெயரின் இறுதிப்பகுதியில் மாற்றம் செய்து பயன்படுத்தும் போக்கு காணப்படுகிறது (சபாபதி குலேந்திரன் **1967:227, 228**).

எ.கா : இயேசுஸ், கிறிஸ்துஸ், மத்தேயுஸ்

இதனையொட்டிக் கத்தோலிக்கர் படைப்புகளில், மத்தேயு 'மத்தியாஸ்' எனவும், லூக்கா 'லூக்காஸ்' எனவும் வழங்கப்படுவதைக்

காண்கிறோம். கிறித்தவ இலக்கியப் படைப்பாளர்கள் பெயர்கள் சிலவற்றைத் தம் விருப்பம் போல் ஒலிபெயர்த்தும், மொழிபெயர்த்தும் வழங்கக் காண்கிறோம். 'தேம்பாவணி கீர்த்தனை'யில் வீரமாமுனிவர் ஆதாம், ஜான் ஆகிய பெயர்களை முறையே ஆதன், சுவானி எனப் பயன்படுத்தியுள்ளார். 'தேம்பாவணி'யில் வளன், வாமன், சிவாசிவன், அறஞ்செயன், காந்தரி, நகுலன் ஆகிய பெயர்களையும் வீரமாமுனிவர் பயன்படுத்தியுள்ளார்.

பிறபெயர்கள்

இதுபோன்றே **பாகால்** (கானான் நாட்டு பழங்குடி மக்கள் வழிபட்டு வந்த ஒரு தெய்வத்தின் பெயர்), **பஸ்கா** (இஸ்ரவேலர் எகிப்து நாட்டிலிருந்து விடுதலையாகிப் புறப்பட்ட நிகழ்ச்சியின் நினைவாகக் கொண்டாடப்படும் பண்டிகை) இதன் பொருள் 'கடந்து செல்லுதல்'. பேராசிரியர் பொன்னு. ஆ.சத்திய சாட்சி இதனைக் 'கடப்புத் திருநாள்' என்று குறிப்பிடுகிறார். பெந்தேகொஸ்தே (பஸ்காவிற்குப் பின் ஐம்பதாவது நாளில் கொண்டாடப்படும் அறுவடைக்காக நன்றி கூறும் யூதப் பண்டிகை), **பெயல் செபூல்** (பேய்களின் தலைவன்), பரிசேயர், சதுசேயர் (யூதச் சமயப் பிரிவினர்), **இலேவியர்** (கோவில் பணிகளில் உதவும் உரிமை பெற்றவர்), **எப்பிக்கூரர்** (எப்பிக்கூருக்-என்ற தத்துவ ஞானியைப் பின்பற்றியவர்கள்), **ஸ்தோயிக்கர்** (சேனோ என்ற தத்துவ ஞானியைப் பின்பற்றியவர்கள்) போன்ற பெயர்களும், இடப்பெயர்களும் ஒலிபெயர்த்து வழங்கப்பட்டன.

மேலும், சில அளவைப் பெயர்களும் ஒலிபெயர்த்து வழங்கப்பட்டுள்ளன. **தினாரியம்** என்பது விவசாயக் கூலித் தொழிலாளியின் ஒரு நாள் கூலிக்குச் சமமான ரோம வெள்ளி நாணயம். ஒரு **தாலந்து** என்பது 6000 தினாரியத்திற்குச் சமம். (தாலந்து என்பது இன்றையக் கிறித்தவத் தமிழில் 'திறமை' என்ற பொருளில் பயன்படுத்தப்படுகிறது). **இலேகியோன்** என்பது ரோம ராணுவத்தில் 6,000 போர் வீரர்கள் கொண்ட படைப்பிரிவைக் குறிக்கும். இதுபோன்றே வடக்கிலிருந்து வீசும் புயற்காற்றைக் குறிக்கும் '**யூராக்கிலோன்**' என்ற சொல்லும் ஒலிபெயர்த்து வழங்கப்பட்டுள்ளது. சீகன்பால்கு தினாரியம், தாலந்து ஆகிய

சொற்களைப் 'பொன்' எனக் குறிப்பிட்டுள்ளார். கத்தோலிக்கர் மொழிபெயர்ப்பில் குறிப்பிடப்படும் 'ஸ்தாத்தேர்' எனப்படும் நாணயம் பவர் மொழிபெயர்ப்பில் 'ஒரு வெள்ளி நாணயம்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது (மத்தேயு 17:27). இதனைச் சீகன்பால்கு **'கால்வராகன் காசு'** எனக் குறிப்பிட்டுள்ளார்.

இதுபோன்றே, 'சிலுவை' என்ற சொல்லும் ஒலிபெயர்க்கப் பட்டதாகும். தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளில் மட்டும் வழங்கப்படும் 'சிலுவை' அல்லது 'சிலுபா' என்ற சொல், சிரியன் சபைகளில் வழங்கப்பட்ட சிலிபோ (Slibo) என்ற சொல்லின் ஒலிபெயர்ப்பாகும். இது போன்றே 'குருசு' என்று வழங்கப்படும் சொல் குருக்ஸ் (Crux) எனும் லத்தீன் மூலத்தைக் கொண்டதாகும். இதுவே ஆங்கிலத்தில் 'கிராஸ்' என வழங்கப்படுகிறது.

## 3.1.4 சமயஞ்சார்ந்த கலைச்சொற்கள்

### அ. ஒலிபெயர்க்கப்பட்ட சொற்கள்

எபிரேய, கிரேக்க மூலங்களைத் தழுவிக் குறிப்பிடத்தக்க சில சமய முக்கியத்துவம் வாய்ந்த சொற்கள் கிறித்தவத் தமிழில் ஒலிபெயர்த்து வழங்கப்பட்டுள்ளன. **ஓசன்னா, ஆமென், அல்லேலூயா** போன்ற சொற்களை இவ்வகையில் குறிப்பிடலாம். 'ஆமென்' என்ற எபிரேயச் சொல்லுக்கு 'அப்படியே ஆகட்டும்' என்பது பொருள். 'உறுதியாகவிருத்தல்', 'திட்டமாகவிருத்தல்' என்றும் பொருள்படும். Hellelujah எனும் எபிரேயச் சொல் கிரேக்கத்தில் 'Alleluja' என வழங்கப்பட்டது. இது தமிழில் கிரேக்க வடிவத்தில் ஒலிபெயர்க்கப்பட்டுள்ளது. இதற்கு 'ஆண்டவரைப் புகழுக' என்பது பொருள். 'ஓசன்னா' என்ற சொல் HOSED-NA என்ற எபிரேய மூலத்தைக் கொண்டது. இது மகிழ்ச்சியில் எழுப்பப்படும் குரல்; இதன் பொருள் 'காத்தருளும்' என்பதாகும். ஆனால் வழக்கில் இது வாழ்த்தைத் தெரிவிக்கப் பயன்படுகிறது.

### ஆ. சமஸ்கிருதத்தில் ஆக்கிக்கொள்ளப்பட்ட சொற்கள்

கிறித்தவப் பொருளை உணர்த்த புதிதாக ஆக்கிக் கொள்ளப்பட்ட விருத்தசேதனம் (Circumcision), இராப்போஜனம் (Holy Communion), ஞானஸ்நானம் (Babtism) போன்ற சமய

முக்கியத்துவம் வாய்ந்த சொற்களும் ஜெபம், அபிஷேகம், ஆராதனை, வேதபாரகர், தீர்க்கதரிசி, ஐயர் போன்ற சமயத் தொடர்பான பொதுவான சொற்களும் சமஸ்கிருத மொழியில் ஆக்கப்பட்டு வழங்கப்படுகின்றன. விருத்தசேதனம், இராப்போஜனம், ஞானஸ்நானம் முதலிய சொற்கள் கிறித்தவப் பொருண்மையில் பயன்படுத்தப்படுகின்றன.

**ஜெபம்** 'மன்றாட்டு' எனவும், **ஆராதனை** 'வழிபாடு' எனவும், **வேதபாரகர்** 'வேத அறிஞர்' எனவும், **தீர்க்கதரிசி** 'இறைவாக்கினர்' எனவும், **நியாயப்பிரமாணம்** 'திருச்சட்டம்' எனவும், **நியாயசாஸ்திரி** 'சட்ட அறிஞர்' எனவும், **பிரதான ஆசாரி** 'தலைமை குரு' எனவும், **விசுவாசம்** 'பற்றுறுதி' எனவும், **பிரசங்கம்** 'அருளுரை' எனவும் கிறித்தவத் தமிழில் இப்பொழுது வழங்கப்படுகிறது. மோனகன் மொழிபெயர்ப்பிலேயே இத்தகைய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இதுபோன்றே, ஆசீர்வாதம், காரியம், கிரியை, ஊழியம், ஊழியக்காரன், நித்திய ஜீவன், இரட்சிப்பு போன்ற கலைச் சொற்களும் கிறித்தவப் பொருளில் ஆளப்பட்டு வருகின்றன.

அன்றிக்ஸ் அடிகளார் சமய முக்கியத்துவம் வாய்ந்த சில சொற்களைப் போர்ச்சுகிசிய மொழியில் ஒலிபெயர்த்து வழங்கியதையும், பின்னாளில் நொபிலி அவற்றைச் சமஸ்கிருதத்திலும் தமிழிலும் மாற்றி அமைத்ததையும் தூ. இன்னாசி எடுத்துக் காட்டியுள்ளார் **(தூ. இன்னாசி 1980:101).**

| அன்றிக்ஸ் | | நொபிலி |
|---|---|---|
| லவுத்திசிமு | > | ஞானஸ்நானம் |
| கொம்பெசாரித்தல் | > | உறுதிபூசுதல் |
| காந்திசிமோ சக்கிறமெந்து | > | நற்கருணை |
| மாத்திரிமோனியு | > | மெய்விவாகம் |

### இ. புதியபொருளில் ஆளப்படும் தமிழாக்கக் கலைச் சொற்கள்

தமிழில் ஆக்கப்பட்ட பல சொற்கள் சிறப்புப் பொருண்மையில் ஆளப்படும் நிலையைக் கிறித்தவத் தமிழில்

காண்கிறோம். இச்சொற்கள் சாதாரணப் பொருளில் (Literal Meaning) அமையாமல், கிறித்தவச் சமயப் பொருண்மையைக் கொண்டவையாக விளங்குகின்றன.

எ.கா:

1. **ஓலை வாசித்தல் :** திருமணத்திற்கு முன்பு திருச்சபையில் அறிவிக்கப்படும் மண அறிவிப்பினைக் குறிக்கிறது.

2. **திடப்படுத்தல் :** கிறித்துவின் மரணத்தின் நினைவாக வழிபாடுகளில் பகிரப்படும் அப்பம் மற்றும் திராட்சைச் சாற்றைப் பெற்றுக்கொள்ள (First Communion) தகுதிப்படுத்தும் திருச்சபை நிகழ்வைக் குறிக்கிறது. இது கத்தோலிக்கர் மரபில் 'புதுநன்மை' எனப்படுகிறது.

3. **மறுபடியும் பிறத்தல் :** இத்தொடர் ஆழமான தத்துவப் பின்புலங்களைக் கொண்டதாயினும், ஒரு மனிதன் தன் பழைய வாழ்வை விட்டு இறைவனுக்குள் புதுவாழ்வை மேற்கொள்ளும் நிலையைக் குறிப்பதாகும். இது பிறவிச்சுழற்சிக் கோட்பாட்டையும், முற்பிறவியின் தீவினைகளின் பயனையே இப்பிறவியில் அனுபவிக்கிறோம் என்ற மூடநம்பிக்கையையும் தகர்ப்பதாகும்.

4. **ஓய்வு நாள் :** Sabbath day என்ற பொருளில், பொதுவாக ஞாயிற்றுக்கிழமையைக் குறிக்கிறது.

5. **கடைசி நாள் :** கடவுளின் இறுதித்தீர்ப்பு நாள் என்ற பொருளில் ஆளப்படுகிறது.

6. **திருநீறு மந்திரித்துப் பூசுதல் :** கடந்த ஆண்டில் மந்திரித்த குருத்தோலையிலிருந்து தயாரிக்கப்பட்ட சாம்பர் திருப்பலியில் மந்திரிக்கப்பட்டுப் பூசப்படுதல். இத்தகைய சமய முக்கியத்துவம் வாய்ந்த சொற்கள் மட்டுமின்றி, சமயம் தொடர்பான சில சாதாரணச் சொற்களும் கிறித்தவப் பொருளில் ஆளப்படுகின்றன.

1. **உபதேசியார் :** குருபட்டம் பெறாத, அருட்பொழிவு பெறாத நிலையில் வழிபாட்டை நடத்தும் பொதுநிலையினரைக் (Laity) குறிக்கிறது.

2. **சபை :** அவையைக் குறிப்பிடாமல், 'Congregation' எனப்படும் திருச்சபையையே குறித்து நிற்கிறது.

3. **பலிபீடம் :** ஆலய அமைப்பில் மேடைப்பகுதி அல்லது அருட்சாதனங்கள் வைக்கப்படும் மேசையைக் குறிக்கும். கடவுளுக்குக் காணிக்கையாக்கப்பட்ட 'பலி' இன்று தன் நேர்பொருளை இழந்த நிலையிலும் அதன் எச்சமாக இன்றும் பயன்படுத்தப்பட்டு வருகிறது. இதனையொட்டிக் கத்தோலிக்க மரபில் காணப்படும் திருப்பலி, பாடற்பலி ஆகியன வழிபாட்டையே குறித்து நிற்கின்றன. பெர்சிவல் தம் மொழிபெயர்ப்பில் (1850) பலிபீடத்தை 'வேதிகை' என மொழிபெயர்த்துப் பயன்படுத்தியுள்ளார்.

4. **நற்செய்தி :** நற்செய்தி என்பது கிறித்துவைப் பற்றிய செய்தி எனும் பொருளிலும், குறிப்பாக மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் ஆகிய சீடர்கள் எழுதிய விவிலியப் பகுதிகளையும் குறிப்பதாகும்.

இதுபோன்றே கோயில்குட்டி, கோயிற்பிள்ளை ஆகிய சொற்கள் திருச்சபையில் துணைப் பணிகளை மேற்கொள்ளும் பணியாளர் என்று பொருள்படும். 'கற்பனை' என்ற சொல் கட்டளை என்று பொருள்படுவதாகும். **ஞானத்தாய், ஞானத்தந்தை** ஆகிய சொற்கள் முறையே God Mother, God Father என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளன. **நல்லவெள்ளி, சாம்பல் புதன்** ஆகிய சொற்களும் கிறித்தவப் பொருளைக் கொண்டவை.

இத்தகைய பெயர்ச்சொற்கள் மட்டுமன்றிச் சில வினைச் சொற்களும் புதுப்பொருளில் கிறித்தவத் தமிழில் வழங்கப்படுகின்றன. **சந்தித்தல், தாங்குதல், கழுவப்படுதல்,** குணப்படுதல் போன்ற சொற்களை இவ்வகையில் குறிப்பிடலாம்.

'தேவன் நம் தேவைகளைச் **சந்திப்பார்**' என்ற தொடரில் சந்திப்பார் என்ற வினைமுற்று 'நிறைவேற்றுவார்' என்ற பொருளிலும், (தேவைகளைத்) **தாங்குங்கள்** என்ற வினைமுற்று 'உதவுங்கள்' என்ற பொருளிலும் மீண்டும் மீண்டும் பயன்படுத்தப்படுவதைக் கிறித்தவத் தமிழில் காணலாம். **கழுவப்படுதல்** என்பது அகத்தூய்மையைக் கருதிப் 'புனிதப்படுத்தப்படல்' என்ற பொருளிலும், குணப்படுதல் என்பது உடல்நலம் பெறுவதைச் சுட்டாமல் ஆன்மநலம் பெறுவது என்ற பொருளிலும் வழங்குவதைத் தமிழில் காண்கிறோம்.

## 3.2 இலக்கணக் கூறுகள்

மொழிநடைப் பண்புகளை உருவாக்குவதில் இலக்கணக் கூறுகளுக்குக் குறிப்பிடத்தக்க பங்கு உண்டு. கிறித்தவப்

பனுவல்களில் காணப்படும் உருபொலியனியல் கூறுகள், சில சிறப்பு வழக்குகள் போன்றவை கிறிதிதவத் தமிழின் தனித்தன்மைக்குக் காரணமாகின்றன. புணர்ச்சி விதிகளிலும் ஒட்டுக்களைக் கையாளும் முறையிலும் கிறித்தவரிடையே விவாதங்கள் நிகழ்ந்து வந்துள்ளதையும் நாம் கவனத்தில் கொள்ளவேண்டும்.

எம்.எஸ். திருமலை தம் 'Aspects of language use' எனும் நூலில் கிறித்தவர்களின் மொழிப் பயன்பாடு குறித்து விரிவாக ஆராய்ந்துள்ளார். விவிலிய மொழிபெயர்ப்பில் காணப்படும் குறிப்பிடத்தக்க மொழிநடைப் பண்புகளைப் பின்வருமாறு பட்டியலிட்டு விளக்குகிறார் (M.S. Thirumalai 1983:100-101).

1. விவிலிய மொழிபெயர்ப்பில் பண்டை, இடைக்காலத் தமிழின் உருபொலியனியல் கூறுகள் பெரிதும் பயன்படுத்திக் கொள்ளப்பட்டுள்ளது. இக்காலப்பகுதியின் எழுத்து முறைகளையும் விவிலிய மொழிபெயர்ப்பு தழுவியுள்ளது.

2. தகுநிலை பெறாத கிளைமொழியின் (Non-Standard dialect) உருபொலியனியல் கூறுகளும் மொழிபெயர்ப்பில் பயன்படுத்தப் பட்டுள்ளன.

3. தகுநிலை பெறாத கிளைமொழியின் உருபியல் ஆக்கப் பேறுகள் (inflection) பலவற்றை விவிலிய மொழிபெயர்ப்பு அறிமுகப்படுத்தியுள்ளது.

4. பண்டைய, இடைக்கால இலக்கியங்களில் காணப்படும் சொற்கள் பயன்படுத்திக் கொள்ளப்பட்டுள்ளன.

5. இதுபோன்றே, தகுநிலை பெறாத கிளை மொழிகளில் காணப்படும் சொற்களும் பயன்படுத்திக் கொள்ளப்பட்டுள்ளன.

6. சமஸ்கிருத மூலத்தைக் கொண்ட பலசொற்கள் தமிழ் விவிலியத்தில் காணப்படுகின்றன.

கொடுந்தமிழுக்கும், செந்தமிழுக்கும் இடைப்பட்ட ஒரு மொழிநடையைக் கிறித்தவப் படைப்பாளர்கள் தேர்ந்தெடுத்துக் கொண்டு, கடினமான சந்திகளை விலக்கி, இலகுவான நடையில் தமது படைப்புகளை ஆக்கித்தர முயன்றனர். கிறித்தவத்தமிழில் காணப்படும் மிகைக்கூறுகள், வேற்றுமை உருபுகள்,

இடைச்சொற்கள், தொடரிணைவுச் சொற்கள் போன்றவற்றின் பயன்பாடு, சில சிறப்பு வழக்குகள் முதலியவற்றைப் பின்வருமாறு காணலாம்.

### 3.2.1 மிகைக்கூறுகள்

ஏ, ஆய், கூட, ஆக, ஆன போன்ற ஒட்டுகள் மிகைக்கூறுகளாக அமைவது கிறித்தவத்தமிழின் பண்பாகும். கிறித்தவ வானொலி நிகழ்ச்சிகளைக் கருத்தாடல் நோக்கில் ஆய்வு செய்துள்ள ந. இளங்கோ இத்தகைய மிகைக் கூறுகள் அமைவதற்கு இரண்டு காரணங்களைக் குறிப்பிடுகிறார் (1996:307).

1. உணர்த்தும் கருத்துக்கு ஓர் அழுத்தத்தைத் (Emphasis) தருவதற்காக அமைந்தவை.
2. ஒப்புமையாக்கத்தால் (analogy) அமைந்தவை.

ஏகாரம்

ஒடு, இல், ஆல் ஆகிய உருபுகளோடு இணைந்து ஏகாரம் மிகைக் கூறாக அமைவதைக் காண்கிறோம்.

எ.கா : அவனோடே (அவன் + ஒடு + ஏ)
கிழக்கிலே (கிழக்கு + இல் + ஏ)
போனதாலே (போனது + ஆல் + ஏ)

இடம், இல் ஆகிய உருபுகளோடு இணைந்து 'அவரிடத்திலே' எனவும், இன், ஆல் ஆகிய உருபுகளோடு இணைந்து 'தேடினதாலே' எனவும் ஏகாரம் மிகைக்கூறாக அமைந்துள்ளது. ஏகாரம் மிகைக் கூறாக அமைவதைப் பேச்சு வழக்கின் செல்வாக்காகக் கருதலாம். இது மீண்டும் மீண்டும் கிறித்தவத் தமிழில் இடம் பெறுகிறது.

ஆய் : 'கு' உருபுடன் இணைந்து 'ஆய்' என்னும் ஒட்டு மிகைக்கூறாக அமைவதைக் கிறித்தவத் தமிழில் காண்கிறோம்.

எ.கா : செய்யப்படும் படிக்காய்
சொல்லும் படிக்காய்

கூட : 'ஒடு' உருபுடன் 'உம்', 'ஏ' போன்ற இடைச்சொற்கள் இணைந்து 'கூட' என்னும் இடைச்சொல் மிகையாக அமையக் காண்கிறோம்.

எ.கா : அனைவரோடும் கூட (ஒடு + உம் + கூட)
அவனோடே கூட (ஒடு + ஏ + கூட)

ஆகா : இவ்வொட்டு குறிப்பாக வியங்கோள் வினைமுற்றுடன் இடம்பெறக் காண்கிறோம். வேறு சூழல்களிலும் இவ்வொட்டு இடம் பெறுகிறது.

எ.கா : நினைவுகூரக்கடவோமாக
மீண்டுமாக

இதுபோன்றே ஆன, கு போன்ற ஒட்டுகளும் மிகைக் கூறுகளாக அமைந்துள்ளன.

எ.கா : சேரவேண்டியதான
அகப்படாத படிக்கு

### 3.2.2 வேற்றுமை உருபுகள்

1. எழுவாய்ப் பெயரோடு, ஆனது (அஃறிணை) ஆனவர், ஆனவன் (உயர்திணை) ஆகியவற்றை வேற்றுமை உருபாகச் சேர்ப்பதைக் கிறித்தவத் தமிழில் காண்கிறோம்.

எ.கா : வசனமானது
கிறிஸ்துவானவர்
ஸ்திரியானவள்

2. ஒரே வேற்றுமைப் பொருளில் வரும் வேற்றுமை உருபுகளில், ஒன்றுக்கு மாற்றாக மற்றொன்றைப் பயன்படுத்துவது சிறந்தது போன்ற விவாதங்களையும் விவிலிய மொழிபெயர்ப்பு வரலாற்றில் காண்கிறோம்.

பவர் மொழிபெயர்ப்பில் காணப்படும் 'ஒடு' உருபுக்கு பதிலாக 'உடன்' என்னும் உருபைப் பயன்படுத்துவது நலம் என யாழ்ப்பாண வேதாகமச் சங்கம் குறிப்பிட்டுள்ளது. சில இடங்களில் வேற்றுமை உருபுக்கு மாற்றாக அதே பொருளில் மாற்று உருபுகள் விவிலியத்தில் இடம்பெற்றுள்ளன.

எ.கா : என்னண்டை (என்னிடம்)
அவரண்டை (அவரிடம்)

சில இடங்களில் வேற்றுமை உருபுகள் விரிந்துநின்று மிகைக் கூறாகவும், சில இடங்களில் தவறான உருபுகளும் இடம்பெற்றுள்ளன.

எ.கா : இன் > Ø

கடவுளின் ராஜ்ஜியம்
கடவுள் ராஜ்ஜியம்

இடம் > கு

அவருக்கு நம் பாவங்களை அறிக்கையிட்டு. . .
அவரிடம் நம் பாவங்களை அறிக்கையிட்டு. . .

பெஸ்கி தம் 'கொடுந்தமிழ்' இலக்கணத்தில் (1848:74) இவ்வாறு உருபுகள் தவறாக அமைவது பற்றி விவாதித்துள்ளார்.

| | | |
|---|---|---|
| ஆணியால் | - | ஆணியோடறைந்தான் |
| கண்ணால் | - | கண்ணோடே கண்டேன் |
| பாவத்தில் | - | பாவத்தோடிருக்கிறான் |
| கன்னத்தை | - | கன்னத்திலடித்தான் |

போன்ற தொடர்களை எடுத்துக்காட்டி பெஸ்கி விளக்கியுள்ளார்.

விவிலிய மொழிபெயர்ப்பில் ஆறாம் வேற்றுமைத் தொகை (உடைமைப் பொருள் வேற்றுமை) பயன்படுத்தப்படும் முறையில் நேரும் பொருள் மயக்கங்கள் பற்றியும் அவை பொது மொழிபெயர்ப்பில் கையாளப்பட்ட முறை பற்றியும் கு. எரோணிமுசு (1995:37,38) பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

> 'Love of God' என்பது கடவுள் காட்டும் அன்பாக இருக்கலாம் அல்லது கடவுள் மீது நாம் காட்டும் அன்பாக இருக்கலாம். 'Gift of the Holy Spirit' என்பது தூய ஆவி என்னும் கொடையாக இருக்கலாம் அல்லது தூய ஆவி தரும் கொடையாக இருக்கலாம்.
>
> 'Light of the World' என்பது உலகுக்கு ஒளியாக இருக்கலாம் அல்லது உலகு தரும் ஒளியாக இருக்கலாம்..... Gospel of Christ என்பதில் இயேசுவாகிய நற்செய்தி, இயேசு அறிவித்த நற்செய்தி, இயேசுவைப் பற்றிய நற்செய்தி என்னும் பொருள்களுக்கு இடமுண்டு.

இதுபோன்ற இடங்களில் அந்தந்த இடத்திற்கேற்ற தெளிவான பொருள் தரப்படுகிறது. வேறு சில இடங்களில் ஒரு சில சொற்களைச் சேர்ப்பதன் மூலம் பொருள் தெளிவாக்கப்படுகிறது. எடுத்துக்காட்டாக, 'வாழ்வின் ஒளி' என்பது 'வாழ்விற்கு வழிகாட்டும் ஒளி' என்றாகிறது. 'நம்பிக்கையின் கடவுள்' என்பது 'நம்பிக்கை தரும் கடவுள்' என விரித்துக் கூறப்படுகிறது. 'கடவுளின் மீட்பு' என்பது 'கடவுள் தரும் மீட்பு' என மொழியாக்கம் பெறுகிறது.

சீகன்பால்கு தம் 'கிராமட்டிகா தமுலிக்கா' (Grammatica Damulica) எனும் நூலில் ஐந்துவேற்றுமைகளைக் குறிப்பிட்டுள்ளார். அவர் கருத்துப்படி ஐந்தாம் வேற்றுமையில் இடம், கருவி, உடனிகழ்ச்சி என்ற மூன்று பிரிவுகளும் அடங்கும். இடவேற்றுமையில் இடத்திலே ~ இடத்தில் என்பவை உயர்திணைப் பெயர்களோடும், இலே ~ இல் என்பவை அஃறிணைப் பெயர்களோடும் சேர்க்கப்பட்டுள்ளன. ஒன்றன்பால் சுட்டுப்பெயர் (அது) செயப்படுபொருள், உடனிகழ்ச்சி ஆகிய வேற்றுமைகளை ஏற்கும் நிலையில் 'அத்து' என்ற வடிவம் பெற்றுள்ளது. (அத்தை, அத்தோடே). இம்முனையில், வேற்றுமை உருபுகளையும், உருபேற்கும் வடிவங்களையும் பயன்படுத்தும் போக்கைச் சீகன்பால்குவின் படைப்புகளில் காண்கிறோம். ஆயினும், பின்னர் வந்த படைப்புகளில் வேற்றுமை உருபுகள் பொருத்தமாகப் பயன்படுத்தப்படும் நிலையைக் காண்கிறோம்.

பவர் மொழிபெயர்ப்பில் காணப்படும் (1864) வேற்றுமை உருபுகள் பல இராஜரீகம் (1979) மொழிபெயர்ப்பில் மாற்றப் பட்டிருக்கக் காண்கிறோம் (P. David Prabhakar 1987:37).

| பவர் (1864) | இராஜரீகம் (1979) | |
|---|---|---|
| அவனால் | அவரிடம் | (ஆல் - இடம்) மத். 3:6 |
| இவரால் | இவரில் | (ஆல் - இல்) மத். 3:15 |
| பரலோக ராஜ்ஜியத்தில் | விண்ணரசினுள் | (இல்- உள்) மத். 5:20 |
| பிதாவிடத்தில் | தந்தையிடமிருந்து | (இல்-இருந்து) மத். 6:1 |

### 3.2.3 துணைவினைகள், கால இடைநிலைகள் முதலியன

துணை வினைகள் மிகைக்கூறாக அமைவது கிறித்தவத் தமிழில் காணக்கூடிய ஒரு பண்பாகும்.

எ.கா : விசுவாசித்துக் கொண்டு வந்தான்.
(விசுவாசித்து வந்தான்) கொண்டு > Ø
கர்த்தர் என் மேய்ப்பராயிருக்கிறார்
(கர்த்தர் என் மேய்ப்பர்) இரு > Ø

அண்மைக்காலத்தில் வெளிவந்துள்ள மொழிபெயர்ப்புகளில், அத்து, இக்கு போன்ற சாரியைகளும், கிறு, கின்று போன்ற கால இடைநிலைகளும், 'இரு' 'கொண்டு' போன்ற துணை வினைகளும் தேவையற்ற இடங்களில் தவிர்க்கப்பட்டிருப்பதைக் காண்கிறோம் (P. David Prabhakar 1987:31,32).

| பவர் மொழிபெயர்ப்பு (1864) | இராஜரீகம் மொழிபெயர்ப்பு (1979) | | |
|---|---|---|---|
| உலகத்திற்கு | உலகிற்கு | (அத்து) | மத். 5:14 |
| மிகுதியாயிருக்கும் | மிகுதியாகும் | (இரு) | மத். 5:12 |
| அவைகள் | அவை | (கள்) | மத். 1:16 |

'கடவுள் பேரில்', 'பலிபீடத்தின் பேரில்', 'பூமியின் பேரில்' போன்ற தொடர்களில் உள்ள 'பேரில்' எனும் இடைச்சொல்லுக்கு 'மேல்' என்ற சொல்லுருபை மாற்றாகப் பயன்படுத்துவது நல்லது என யாழ்ப்பாண வேதாகமச்சங்கம் கருதியது (சபாபதி குலேந்திரன் 1967:178).

ஒரு சொல் வேற்றுமை ஏற்கும் நிலையில் பயன்படுத்தப்படும் சொல்வடிவம் குறித்தும் விவிலியம் மொழிபெயர்ப்பாளர்களிடையே கருத்து வேறுபாடு காணப்படுகிறது (சபாபதி குலேந்திரன் 1967:229)

எ.கா : பிலிப்பின் > பிலிப்புவின் மத்.14-3

அதன் > அதின் மத்.23-20

'அதை' என்ற வடிவத்துக்கு மாற்றாக, 'அத்தை' என்ற வடிவத்தைச் சீகன்பால்கு கையாண்டதுபோல, 'எனப்படுவான்',

'எனப்பட்ட' ஆகிய சொற்கள் முறையே பவர் மொழிபெயர்ப்பில் 'என்னப்படுவான்' 'என்னப்பட்ட' என ஒற்று இரட்டித்து வழங்கக் காண்கிறோம். இம்மாற்றம் அண்மைக்கால மொழிபெயர்ப்புகளில் தவிர்க்கப்பட்டுள்ளது.

### 3.2.4 மாற்றுப்பெயர்

வழிபாடுகளிலும், மன்றாட்டுகளிலும் கடவுளை முன்னிலைப்படுத்திக் கூறும்பொழுது 'நீர்' என்ற முன்னிலை ஒருமை மரியாதை வடிவத்தைத் தமிழ்க்கிறித்தவர்கள் பயன்படுத்தக் காண்கிறோம். 'நீர்' முன்னிலைப் பன்மை வடிவமாக நன்னூலாரால் குறிப்பிடப்படுகிறது. இந்திய சமய மரபில் கடவுளரை முன்னிலைப்படுத்திக் கூறும்பொழுது 'நீ' என்ற முன்னிலை ஒருமை வடிவமே பயன்படுத்தப்பட்டுள்ளது. கிறித்தவத் தமிழில் காணப்படும் 'நீர்' எனும் பயன்பாடு, வழக்கிலுள்ள இலக்கிய, மொழி மரபுகளிலிருந்து மாறுபட்டதாகும் எனக் கருதும் எம்.எஸ். திருமலை பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

> இச்சொற்பயன்பாடு எப்படி ஏற்பட்டது என்று தெளிவாகத் தெரியவில்லை. எபிரேய, கிரேக்க மூலத்திலிருந்து வந்த நேரடி மொழிபெயர்ப்பா அல்லது இறையியல் தேவையா அல்லது இந்து சமயப் போக்கிலிருந்து வேறுபட்ட ஒருதனித்தன்மையை நிலைநாட்டும் உணர்வால் மேற்கொள்ளப்பட்ட முயற்சியா என்று தெரியவில்லை. காரணம் எதுவாயினும், நீர் என்ற சொல்லும் அதற்கேற்ற வினைவிகுதிப் பேறும் தனித்தன்மையை அடையாளம் காட்டி நிற்க உதவுகின்றன.

மகன் தந்தையிடம் பேசும்பொழுது 'நீ இரு' என்பதற்குப் பதிலாக 'நீர் இரும்' என்று கூறவேண்டும் எனப் பெஸ்கி குறிப்பிட்டுள்ளார் (1848:35). 'நீர்' என்ற பயன்பாட்டையொட்டித் 'தேவரீர்' போன்ற சொல்லாட்சிகளையும் கிறித்தவத் தமிழில் காண்கிறோம்.

மரியாதைப் பன்மையைப் பயன்படுத்தும் முறையிலும், கருத்து வேறுபாடுகளை விவிலிய மொழிபெயர்ப்பாளர்களிடையே காணமுடிகிறது. விவிலிய மூலமொழிகளான எபிரேய, கிரேக்க மொழிகளில் மரியாதை வேறுபாடு அதிகமாகக் கிடையாது.

ஆயினும் இந்த மரியாதைகளைக் கடைப்பிடிப்பது அவசியம் என இரேனியஸ் கருதினார். இரேனியசின் மொழிபெயர்ப்பை ஆராய்ந்த குழுவினர் இரண்டு கருத்துகளைக் கூறினர் (சரோஜினி பாக்கியமுத்து **1990:134,135**).

1. தமிழகத்து மரியாதைக் குறியீடுகளை வேதாகமப் பாத்திரங்கள் ஏற்க வேண்டியதில்லை. ஏனெனில், ஒரு மொழியின் மரியாதை அம்சங்கள் பெரும்பாலும், அச்சமுதாயத்துப் பெருந்தலைகளின் ஆணவ அகம்பாவங்களின் விளைவாக ஏற்பட்டவை.

2. ஆங்கில மொழியில் இந்த வேறுபாடுகள் கிடையா. எனவே, தமிழிலும் அவற்றை அகற்றிவிட வேண்டும்.

சீர்திருத்தக் கிறித்தவர்களால் பரவலாகப் பயன்படுத்தப் படும் பவர் மொழிபெயர்ப்பில் திரித்துவர் மூவருக்கு மட்டுமே மரியாதை விகுதிகள் கொடுக்கப்பட்டுள்ளன. விவிலியத்தில் இடம் பெற்றவர்கள் யாவரும் அவன், இவன் என்றே குறிப்பிடப்படுகின்றனர். பொது மொழிபெயர்ப்பில் சாதாரண மாந்தர்களும் (பார்வையற்றவர், குத்தகைதாரர்) மரியாதையுடன் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

அவர்தாம், இவர்தாம் போன்ற தொடர்களில் இடம்பெறும் தற்சுட்டு மாற்றுப்பெயர் (Reflexive Pronoun) கிறித்தவத் தமிழில் அதிகம் இடம்பெற்றுள்ளன.

### 3.2.5 இணைப்புச் சொற்கள் (Cohesion)

அதேனெனில், அதன்றியே, இதன்றியே, நீயோவெனில், ஆனபடியினாலே, மற்றபடியல்ல, மாத்திரமல்ல, அதெப்படியெனில், என்கிலும், இந்தப்பிரகாரமாக போன்றவை, முன்பின் அமைகிற உரைகளுக்கிடையேயுள்ள (utterances) கருத்துத் தொடர்பை வெளிப்படுத்த உதவும் சொற்களாகும். இச்சொற்கள் கிறித்தவத் தமிழில் மிகுதியாக இடம்பெறுகின்றன. இவற்றுள் 'மாத்திரமல்ல' என்ற சொல்லை, அருளுரை ஆற்றுவோரில் சிலர் மீண்டும் மீண்டும் பயன்படுத்துவதைக் காணலாம்.

கிறித்தவத் தமிழில் வழங்கும், அதேனென்றால், அதேதெனில் போன்ற சொற்கள் ஹோற்றி (hoti) என்ற கிரேக்கச்

சொல்லின் மொழிபெயர்ப்பாகும். சீகன்பால்கு, பெப்ரீஷியஸ் போன்றோர் பயன்படுத்திய இச்சொற்களுக்கு மாற்றாக 'ஆகையால்' என்ற சொல்லை இரேனியஸ் கையாண்டுள்ளார்.

தத்துவபோதகரின் 'ஆத்தும நிர்ணயம்' நூலைப் பதிப்பித்த ச. இராசமாணிக்கம் அந்நூலில் காணப்படும் இத்தகைய இணைப்புச் சொற்கள் பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகிறார் (1967:xviii).

> 'மற்றபடியல்ல' என்ற சொல்லால் ஆசிரியரின் வாக்கியங்கள் பல இடங்களில் முடிவடைகின்றன. 306 பக்கங்கள் கொண்ட முதல்பதிப்பில் ஏறத்தாழ 211 முறை இச்சொல் வருகிறது. மேலும், மேல்வாரியாய் என்று தற்பொழுது பொருள்படும் 'பத்தும்பத்தாய்' என்ற சொல் ஆசிரியர் காலத்தில 'கவனமாய்' என்னும் பொருளில் வருகிறது. இந்நூலில் மட்டும் 36 தடவை வருகிறது. இப்பொருள்களைப் பிரித்துக்காட்டுகையில் ஒன்றில்.......ஒன்றில், ஆனாலும்........என்கிலும் என்று ஆசிரியர் பல இடங்களில் பயன்படுத்துகிறார். அவ்வாறே என்பதற்கு அத்தன்மையாக, அம்மருவாதியே, அவ்வண்ணமே, அந்தவிதமாக, அந்தப் பிரகாரமாக, அப்படிக்கொத்த, அப்பேர்பட்ட மேரையாக' என்று பல சொற்களைப் பயன்படுத்துகிறார். 'மேலும்' என்பதற்குப் பதிலாக 'இதன்றியே, இதுக்கப்பால், இதல்லாதே, இதுதவிர' என்பன வருகின்றன.

இடைச்சொற்களும், வாக்கியங்களை இணைக்கக்கூடிய இணைப்புச் சொற்களும் எபிரேய மொழியில் குறைவாக இருப்பதும், இருக்கும் ஒரு சில சொற்களே பல இலக்கணப் பொருள்களைத் தரவேண்டியிருப்பதும் இதற்குக் காரணமாக சரோஜினி பாக்கியமுத்து குறிப்பிடுகிறார் (1990:122). ஒரு எபிரேயச் சொல், 'மேலும், தான், போது, இல், ஏன்' ஆகிய வெவ்வேறு தமிழ் உருபுகளின் பொருளில் பயன்படுத்தப்படுகிறது. எனவே கிறித்தவத் தமிழில் காணப்படும் இத்தகைய போக்கிற்கு மூலமொழியின் இலக்கண அமைப்பு காரணமாகலாம்.

## 3.3. சிறப்பு வழக்குகள்

1. வினையெச்சத்தின் பின் 'கடமைப்பட்டுள்ளோம்' என்னும் பொருளில், 'கடவோம்', 'அவ்வாறே ஆகட்டும்' என்னும் பொருளில்

'கடவது' ஆகிய சொற்களைப் பயன்படுத்துதல் கிறித்தவர்களிடையே பெருவழக்காக உள்ளது. இது சாதாரணமாகப் பிறரால் பயன்படுத்தப்படுவது இல்லை (ந. இளங்கோ 1996:311).

எ.கா : அன்பாக இருக்கக் கடவோம்
ஆகக்கடவது
காக்கக்கடவது

வீரமாமுனிவர் தம் கொடுந்தமிழ் இலக்கணநூலில், கடவேன், கடவாய், கடவீர், கடவான், கடவார், கடவாள், கடவும், கடவோம், கடவீர்கள், கடவார்கள் ஆகிய வடிவங்களைக் குறிப்பிட்டுள்ளார் (Joseph Beschi 1848:64)

2. ஒப்புமையாக்கத்தாலோ அன்றி வேறு நூற்பயிற்சியாலோ 'மனஸ்கரித்து' 'வசனித்தார்' போன்ற தவறான சொல்லாக்கங்கள் தேம்பாவணிக் கீர்த்தனையில் ஆளப்பட்டிருப்பதை சூ. இன்னாசி எடுத்துக்காட்டியுள்ளார் (1988:77). இதனையொட்டி, 'விசுவாசித்திருக்கிறேன்', 'அஞ்சலிக்கிறோம்' போன்ற சொல்லாக்கங்களில் பெயர்கள் வினையடிகளாகப் பயன்படுத்தப் பட்டிருப்பதைக் கிறித்தவத் தமிழில் காண்கிறோம்.

3. ஆங்கில மொழியிலுள்ள தொடர்கள் சில சொல்லுக்குச் சொல் மொழிபெயர்ப்பாகக் கிறிததவத் தமிழில் இடம்பெற்றுள்ளன. இவை கிறித்தவத் தமிழின் தனித்தன்மைக்குக் காரணமாக உள்ளன.

எ.கா : நன்றி செலுத்துகிறேன்
தேவைகளைச் சந்திக்க
கிறிஸ்துவுக்குள்
இயேசுவின் நாமத்திலே

இத்தகைய சிறப்பு வழக்குகள் தொடர்ந்து இன்றளவும் கிறித்தவத் தமிழில் இடம்பெறக் காண்கிறோம். இவ்வியலில் சுட்டிக் காட்டப்பட்டுள்ள கிறித்தவத் தமிழ்க்கூறுகளில் சில, கிறித்தவத் தமிழ் அல்லாத பிற சூழல்களிலும் பயன்படுத்தப்படக்கூடுமெனினும், இவை மீண்டும் மீண்டும் கிறித்தவத் தமிழில் பயன்படுத்தப்படும் முறையில் கிறித்தவத்தமிழின் தனித்தன்மைக்குக் காரணமாக அமைகின்றன.

## 3.4 கருத்துப் படிமங்கள், மரபுத் தொடர்கள்

தமிழ் விவிலியம் கிரேக்க, எபிரேய மூலங்களிலிருந்தும், ஜேம்ஸ் அரசனின் அதிகாரப்பூர்வமான ஆங்கில விவிலியத்தைத் தழுவியும் மொழிபெயர்க்கப்பட்டது. வழிபாடுகளில் பயன்படுத்தப் படுகிற ஞானப்பாடல்கள் (Hymns) பெரும்பான்மையும், ஜெர்மன் மூலத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்டவை. அன்றிக்ஸ் எழுதிய வழிபாடு முறை பற்றிய நூல்கள் போர்ச்சுகீசிய மூலத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்டவை. எனவே, கிறித்தவத் தமிழில் கிரேக்கம், எபிரேயம், ஆங்கிலம் முதலிய மொழிகளின் முதன்மைப் பண்பாடு (Primary Culture) சார்ந்த கருத்துப்படிமங்களும், உருவகங்களும், மரபுத் தொடர்களும் இடம்பெற்றுள்ளன. இத்தகைய கூறுகளும் கிறித்தவத் தமிழின் தனித்தன்மைக்குக் காரணமாக அமைகின்றன.

மூல மொழியின் மரபுகள் போற்றப்பட வேண்டுமா அல்லது இலக்கு மொழி மரபிற்கேற்பக் கருத்து மொழிபெயர்ப்பாக அமைய வேண்டுமா என்பதில் விவிலிய மொழிபெயர்ப்பாளர் களிடையே கருத்து வேறுபாடு காணப்படுகிறது. விவிலிய மொழிபெயர்ப்பாளர்களில் இரேனியஸ் கருத்து மொழிபெயர்ப்புக்கு முதலிடம் அளித்தவர். மூலமொழியைத் தழுவி இலக்கு மொழியிலும் மரபுத் தொடர்களை அமைப்பது அவசியம் எனச் சபாபதி குலேந்திரன் கருதுகிறார். இதுபற்றி அவர் பின்வருமாறு குறிப்பிடுகிறார் (1968:17).

> "எபிரேய பாஷை பேசியவர்களும் கிரேக்கபாஷை பேசியவர்களும் நம்முடைய பாஷையைப் பேசுவோரும் வெவ்வேறு பண்பாட்டுக்குரியவர்கள். ஆகவே முந்தியவர்களுடைய கருத்துக்களை நமது பாஷையில் கொண்டுவரும்போது புதிய பிரயோகங்கள் அவசியமானவை. உதாரணமாகப் பின்வருவனவற்றை நமது வேதத்தில் காண்கிறோம். 'கர்த்தர் என் மேய்ப்பர்', 'அவன் கொம்பு உயரும்', 'கர்த்தரின் நாமம் பலத்த துருகம்' இப்படியான உபயோகங்கள் நமது பாஷையில் இல்லாவிடினும், அவை அப்படியே மொழிபெயர்க்கப்பட வேண்டியது அவசியம்"

காலம், அளவு போன்றவற்றைக் குறிக்கும் மூலமொழிச் சொற்கள் கிறித்தவத் தமிழில் இடம்பெறுகின்றன. ஆறாம்மணி,

மூன்றாம்மணி (மத்.27:45) இரவின் நான்காம் சாமம் (மத்.14:25) ஆகியன தமிழ்ச்சூழலில் நேர் பொருளைத் தருவன அல்ல. தாலந்து, தினாரியம் போன்ற அளவைப் பெயர்களும் கிறித்தவத்தமிழில் இடம்பெற்றுள்ளன. 'தாலந்து' என்ற சொல் கிறித்தவத்தமிழில் புதுப்பொருளில் வழங்கப்படுகிறது. (கலைச்சொற்கள் பகுதியில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது) தமிழ் மரபிற்கேற்ப மரக்கால், 'மாரடித்தல்' போன்ற சொற்களை இரேனியஸ் பயன்படுத்தியிருப்பதை அ.டேனியல் (1989:118, 136) எடுத்துக் காட்டுகிறார். தமிழ்ச்சூழலில் 'கடுகு' செடியாகவே அறியப்பட்டுள்ளது. பாலஸ்தீனத்தில் வளரும் 'கடுகுமரம்' தமிழ்விவிலியத்தில் இடம்பெறுகிறது. மேலும், தமிழகத்திற்கு அறிமுகமில்லாத 'ஒலிவ மரம்' கிறித்தவத் தமிழில் சிறப்பிடம் பெறக்காண்கிறோம்.

விவிலிய மொழிபெயர்ப்பாளர்களில் இரேனியஸ் கருத்து மொழிபெயர்ப்பை வற்புறுத்தியோடு விவிலிய மொழிபெயர்ப்புக் கொள்கைகள் பற்றி விரிவாக ஆராய்ந்தவர். விவிலியத் தொடர்கள் பலவற்றை எடுத்துக்காட்டி அவை இலக்கு மொழியில் எவ்வாறு மொழிபெயர்க்கப்படவேண்டும் எனத் தெளிவுபடுத்தியவர். 'ஒருவருடைய நட்சத்திரம்' என்பது இந்தியச் சூழலில் 'பிறந்த நட்சத்திரத்தைக் குறிக்கும்'. கிறிஸ்து பிறந்தபோது தோன்றிய நட்சத்திரம் பற்றிய செய்தி விவிலியத்தில் குறிப்பிடப்படுகையில், 'அவருடைய நட்சத்திரம் (மத்: 2-2) என்ற தொடர் கையாளப்பட்டுள்ளது. இது 'அவருக்காகத் தோன்றிய நட்சத்திரம்' என்று இருக்கவேண்டும் என இரேனியஸ் கருதினார். இதுபோன்றே, 'உன் சந்ததியை பூமியின் தூளைப் போல் ஆக்குவேன்' (ஆதியாகமம் : 13-16) என்ற சொற்றொடர் தமிழ் மொழிபெயர்ப்பில் இடம்பெறுகிறது. 'தூள்' என்பது தமிழ்ச் சூழலில் அழிவோடு தொடர்புடையது. எனவே, பொருள் மயக்கத்தைத் தவிர்க்க, 'உன் சந்ததியைப் பூமியின் தூளைப்போல் பெருகப் பண்ணுவேன்' எனப் பெயர்க்கவேண்டும் என்பது இரேனியஸ் கருத்து.

இப்போக்கையொட்டி, பவர் மொழிபெயர்ப்பில், 'கிறிஸ்துவின் அன்பு எங்களை நெருக்கி ஏவுகிறது' (2கொரிந்தியர் 5:14) என்ற சொற்றொடர், இராஜரீகம் மொழிபெயர்ப்பில், 'கிறிஸ்துவின் அன்பு எங்களை முற்றிலும் ஆட்கொண்டிருக்கிறது

எனத் தமிழ் மரபிற்கேற்ப மொழிபெயர்க்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

தூய ஆவியார் (பரிசுத்த ஆவி) புறாவைப் போல் இறங்குதல் **(யோவான் 1:32)** தமிழ்ச் சூழலில் புதிய கருத்துப் படிமமாகும். புறாவைச் சமாதானத்தின் குறியீடாகக் கருதுவதும், சிலுவையைப் பாவம், மன்னிப்பு, மீட்பு, சகிப்புத்தன்மை, அன்பு ஆகியவற்றின் குறியீடாகக் கருதுவதும் உலகளாவியதாகவே இன்று கருதப்படுகிறது. 'புதுக்கவிதையில் சிலுவை' எனும் பொருளில் ஆய்வு ஒன்று தமிழில் நிகழ்ந்துள்ளது.

**'கர்த்தருக்கு வழியை ஆயத்தப்படுத்துங்கள்', 'என் நேசர் லீலி புஷ்பங்களில் மேய்கிறார்', 'நீங்கள் கனி தர வேண்டும்', 'வெளிச்சத்தின் ஆயுதங்களைத் தரித்துக் கொள்ளக் கடவோம்', 'முற்பிதாக்கள்'** போன்ற சொற்றொடர்கள் மூல மொழியின் மரபை ஒட்டி அமைந்திருப்பதைச் சரோஜினி பாக்கியமுத்து சுட்டிக் காட்டுகிறார்.

கிறிஸ்துவைத் 'தாவீதின் குமாரனே' எனக் குறிப்பிடும் மரபு மூலமொழியைத் தழுவியதாகும். ஒரே சொல் தந்தை, பாட்டன், முப்பாட்டன், மூதாதையர் போன்றோரைக் குறிக்கும் மரபை எபிரேய மொழியில் காண்கிறோம். எனவே, இராஜரீகம் மொழிபெயர்ப்பில், இத்தொடர் 'தாவீதின் வழித்தோன்றலே' என அமைந்துள்ளது. கேட்டின் புத்திரர், எகிப்தின் புத்திரர், இருட்டின்புத்திரர், ஒளியின் பிள்ளைகள் போன்ற தொடர்களும் யூத மரபையொட்டி கிறித்தவத் தமிழில் இடம்பெறக் காண்கிறோம்.

ஆயினும் அண்மையில் வெளிவந்துள்ள பொது மொழிபெயர்ப்பில் (திரு விவிலியம் - 1995) இத்தகைய உருவகங்கள் தவிர்க்கப்பட்டு, அவற்றின் பொருள் தரப்பட்டுள்ளது.

எ.கா.

| | | |
|---|---|---|
| Sons of light | ஒளியைச் சார்ந்தவர்கள் | **(யோவான் 12:36)** |
| Sons of Peace | அமைதியை விரும்புவோர் | **(லூக்கா 10:16)** |
| Sons of thunder | இடியைப் போன்றோர் | **(மாற்கு 3:17)** |
| Sons of the bride chamber | மண விருந்தினர் | **(மாற்கு 2:19)** |
| Your sons | உங்களைச் சார்ந்தவர்கள் | **(லூக்கா 11:19)** |

'தாரை ஊதுவியாதே' (Sound a trumpet - மத். 6:2) என்ற தொடர், பவர் மொழிபெயர்ப்பில் இடம்பெறுகிறது. மற்றவர் அறியும்படியாக, தம்மைப்பற்றி பெருமையடித்துக் கொள்ளும் தன்மையைச் சுட்ட இத்தொடர் கையாளப்பட்டுள்ளது. இதனைத் தமிழ் மரபிற்கேற்பப் 'பறை சாற்றிக் கொள்ளாதே' என இராஜரீகம் மொழிபெயர்த்துள்ளார். இது 'தம்பட்டம் அடிக்காதீர்' எனப் பொது மொழிபெயர்ப்பில் அமைந்துள்ளது. இதுபோன்றே, 'காணிக்கையாக வைத்தார்கள்' எனப் பவர் மொழிபெயர்ப்பில் காணப்படும் தொடரைக் காணிக்கையாகப் படைத்தார்கள் என இராஜரீகம் அமைத்துள்ளார்.

விவிலியம் கருத்து மொழிபெயர்ப்பாக அமையவேண்டும் என்பதில் குறிப்பிடத்தக்க கவனம் மேற்கொள்ளப்பட்டிருப்பினும், மூலமொழியின் கருத்துப் படிமங்களும் மரபுத்தொடர்களும், வாக்கிய அமைப்புகளும் கிறித்தவத் தமிழில் மிகுதியாக இடம்பெற்றிருக்கக் காண்கிறோம். தமிழ் விவிலிய மொழிபெயர்ப்புக் குழுவுக்கு விதித்த நிபந்தனைகள் பற்றிச் சபாபதி குலேந்திரன் குறிப்பிடுகிறார் (1968:120).

> சென்னை வேதகாமச் சங்கத்தார், யாழ்ப்பாணத்தில் செய்யவிருக்கும் திருப்புதல் 'அதிகாரம் பெற்ற திருப்புதல்' (The Authorised Version) என்னும் 1611ஆம் ஆண்டின் ஆங்கிலத் திருப்புதலை விட்டுச் சிறிதும் விலகக் கூடாதென ஒரு பிராமணம் கற்பித்தனர். அவர்கள் இக்கட்டுப்பாட்டோடு நின்றுவிடாமல், அடுத்த வருடம் (1841 மார்ச்சு மாதம் 15ஆம் நாள்) தமது நிபந்தனையை இன்னும் விரித்து ஆங்கில மொழிபெயர்ப்பின் கருத்து மாத்திரமன்றி, வசன அமைப்பு, சொல்லடுக்கு, குறியீடுகள் (Punctuation) எல்லாம் முற்று முழுவதுமாகப் பாதுகாக்கப்பட வேண்டுமெனவும் தீர்மானித்தனர். ஆங்கிலம் தெரிந்த எவரும் இப்படியான பிரமாணத்துக்கமைய மொழிபெயர்ப்பதனால் கருத்துக்கும், பாஷை நடைக்கும் தமிழில் எவ்வளவு சீர்கேடு நிகழ்ந்திருக்குமென அனுமானிக்கலாம்.

இதனாலேயே, யாழ்ப்பாணத்தார் கிறித்தவத் தமிழை 'ஆங்கிலத் தமிழ்' எனவும், இராஜரீகம் 'எபிரேயத்தமிழ்' எனவும் குறிப்பிடுவதைக் காண்கிறோம்.

## 3.5 கருத்தாடல் அமைப்பு

கிறித்தவ வழிபாட்டு ஒழுங்கும், வழிபாட்டு முறைமையில் காணப்படும் மன்றாட்டுகள் (ஜெபம்), பற்றுறுதி அறிக்கை (விசுவாச பிரமாணம்), பிழையுணர்தல் (பாவ சங்கீர்த்தனம்), ஆசியுரைகள் போன்றவற்றின் கருத்தாடல் அமைப்பும் (Discourse Pattern) கிறித்தவத் தமிழின் தனித்தன்மைக்குக் காரணமாகின்றன. கிறித்தவர்களின் துண்டு வெளியீடுகள் (கைப்பிரதிகள்), பாடல்கள், ஆன்மீகக் கூட்டங்கள், வானொலி, தொலைக்காட்சி, இதழ்கள் ஆகியவற்றில் இடம் பெறும் அருளுரைகள் போன்றவற்றின் கருத்தாடல் அமைப்பும் கிறித்தவத் தமிழின் தனித்தன்மைகளைக் கொண்டுள்ளன.

### 3.5.1 வழிபாட்டு முறைமை

அன்றிக்ஸ் அடிகளின் முதலிரண்டு நூல்களும் கிறித்தவ வழிபாட்டு முறைமை பற்றியவை. அன்றிக்ஸ் எழுதிய 'கிரீசித்தியானி வணக்கம்' (1579) எனும் நூலின் தலைப்பு கிறித்தவர் செய்யும் வழிபாட்டைக் குறிப்பதாகும். இந்நூலில் சிலுவை மந்திரம், பரலோக மந்திரம், விசுவாச மந்திரம் முதலியவற்றின் விளக்கங்களும், பத்துக் கற்பனை, திருச்சபைக் கட்டளைகள், தலையாய பாவங்கள், புண்ணியங்கள், பாக்கியங்கள், பாவ சங்கீர்த்தனம் ஆகியன இடம் பெற்றுள்ளன (ச. இராசமாணிக்கம் 1963:4).

தொடக்கத்தில் வெளியிடப்பட்ட கிறித்தவப் பனுவல்கள் வினா-விடை அமைப்பில் எழுதப்பட்டுள்ளன. அன்றிக்ஸ் எழுதிய கிரீசித்தியானி வணக்கமும் வினா-விடையாக அமைந்த நூலாகும். 'மசலா' என்ற இஸ்லாமியர் சிற்றிலக்கிய வடிவமும் வினாவிடையில் அமைந்ததாகும். ஜே. ஞானசீலன் முத்துராஜ் (1986:ix) சல்லாபம் என்ற பெயரில் அமைந்த ஓலைச் சுவடிகள் பலவற்றைப் பிரெஞ்சு தேசிய நூலகத்தில் கண்டதாகக் குறிப்பிட்டுள்ளார். இந்நூல்கள் வினா-விடை அமைப்பில் அமைந்தவை.

இந்தியச் சமய வழிபாட்டுப் பனுவல்கள் செய்யுள் நடையிலிருந்த காலத்தில் உரைநடையில் வழிபாட்டுப் பனுவல்களைக் கிறித்தவர்கள் தமிழில் அறிமுகப்படுத்தினர்.

தற்பொழுது வழக்கிலுள்ள வழிபாட்டு முறைகள் மேலை நாட்டு வழிபாட்டு முறைகளின் தழுவலாகவே அமைந்துள்ளன.

வழிபாட்டில் பயன்படுத்தப்படுகிற உரைப்பகுதிகள் குறிப்பிட்ட ஏற்ற இறக்கங்களுடன் உச்சரிக்கப்படுகின்றன. தமிழ், ஆங்கிலம், தெலுங்கு, கன்னடம், மலையாள மொழிகளில் நிகழும் கத்தோலிக்க வழிபாடுகளைக் கூர்ந்து நோக்கில் உரைப்பகுதிகள் எல்லா மொழிகளிலும் ஒரே விதமான ஏற்ற இறக்கங்களுடன் உச்சரிக்கப்படுவதை உணரலாம்.

கிறித்தவ சமய வழிபாட்டு முறைகளில் காணப்படும் தமிழ் பற்றி டாக்டர் மோசசு மைக்கேல் பாரடே பின்வருமாறு குறிப்பிடுகிறார் (ப. டேவிட் பிரபாகர் **1996**).

> 'கிறித்தவத்தைப் பொதுவாகச் சபை வழிப்பட்ட சமயம் எனக் குறிப்பிடுவர். கிறித்தவம் கூட்டுத் தொழுகைக்கு முதன்மை தருவது. ஞாயிற்றுக் கிழமைகளிலும் பிற சிறப்பு நாட்களிலும் செய்யப்படும் கூட்டுத்தொழுகை, பெரும்பாலான மரபு வழிப்பட்ட திருச்சபைகளில் நன்கு வடிவமைக்கப்பட்டதொரு 'வழிபாட்டு முறையைத் தழுவி அமையும். இவ்வழிபாட்டு முறையில் கடவுளைப் போற்றி உரைக்கும் துதி, தங்கள் குறை நினைந்து உருகும் பாவ அறிக்கைகள், பற்றுறுதி வெளிப்பாடுகள், அருளுரைகள், ஆசிமொழிகள் முதலியன இடம் பெறும். இவற்றுக்குப் பயன்படுத்தப்படும் மொழி நடையும் விவிலிய மொழி நடையினைத் தழுவியே அமையும். மேலும் திருச்சபைகளில் மரபாகப் பயன்படுத்தப்படும் சொல்லாட்சிகளும் இடம் பெற்றிருக்கும்.

தென்னிந்தியத் திருச்சபையின் ஒழுங்கின்படி பின்வரும் முறையில் வழிபாட்டு நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன்றாக அமைகின்றன.

1. கீதம் அல்லது கடவுள் வாழ்த்து
2. முகவுரை - வேத வசனங்கள்
3. மௌனமாகப் பிரார்த்தனை செய்தல்
4. பாவ அறிக்கை

5. நன்றி செலுத்துதல்

6. சங்கிதங்கள்

7. பத்துக் கற்பனை அல்லது பாக்கிய வசனங்கள்

8. வேத வாசிப்பு

9. அப்போஸ்தலர் விசுவாசப் பிரமாணம்

10. விசேஷப் பிரார்த்தனைகள்

11. சிறுவர் பாட்டும் சிறுவருக்குப் பிரசங்கங்களும்

12. விளம்பரம்

13. காணிக்கை

14. கீதம்

15. அருட்பிரகாசத்துக்கான பிரார்த்தனை

16. பிரசங்கம்

17. கீதம்

18. பிரார்த்தனையும் ஆசிர்வாதமும் மங்களமும்

வழிபாடுகள் நடைபெறும்போது, இவற்றுள் சில பகுதிகள் தவிர்க்கப்படுவதும் சிலபகுதிகள் வரிசைமுறை மாறி நிகழ்வதும் உண்டு. இவற்றுடன் 'சாட்சி கூறல்' (பக்தர் ஒருவர் தன் தனிப்பட்ட இறையனுபவத்தைச் சபையினருக்குக் கூறல்) இடம்பெறுவதுண்டு. சில ஆன்மீகப் பொதுக் கூட்டங்களில் அன்னிய பாஷை பேசுதலும் (இறை உணர்வு வெளிப்பாடு) இடம் பெறுவதுண்டு.

இல்லத்தில் நிகழும் வழிபாடுகளில் (குடும்ப ஜெபம்) பாடல், வேத வாசிப்பு, ஜெபம் ஆகியன தவறாமல் இடம் பெறுகின்றன. கல்விக் கூடம், மருத்துவமனை முதலிய நிறுவனங்களில் காலை, மாலை வேளைகளில் நடைபெறும் வழிபாடுகளிலும் இம்முறையினைக் காணலாம்.

திருவிருந்து (இராப்போஜனம்), ஞானஸ்நானம் (பெயரிடல்) திடப்படுத்தல், திருமணம், அடக்கம் (இறப்பு) அபிஷேகம் போன்ற சிறப்பு வழிபாடுகளில் வரையறுக்கப்பட்ட ஒழுங்கு முறைகள்

பின்பற்றப்படுகின்றன. வழிபாட்டின் முடிவில் வாழ்த்தும் இறையாசியும் அமைகின்றன. இராப்போஜனக் கட்டளை (VERBA INSTITUTIONS), வாழ்த்துதல், ஆசீர்வாதம் (SALUTATIO ET BENEDICTO) போன்றவை பாடப்படுவதும் உண்டு. லூத்தரன் திருச்சபையினரிடம் இம்மரபை இன்றும் காண்கிறோம்.

## கூட்டு வழிபாடு

கிறித்தவ வழிபாட்டில் வழிபாட்டை நடத்துவோருடன் சபையோரும் பங்கு பெறுகின்றனர். பற்றுறுதி அறிக்கைகள், பிழையுணர்தல், பரமண்டல ஜெபம் போன்றவற்றைச் சபையார் சேர்ந்து சொல்லுகின்றனர்.

'சங்கீதங்கள்' எனும் விவிலியப் பகுதியை வழிபாட்டை நடத்துபவரும், சபையினரும் மாறி மாறி வாசிப்பது இடம் பெறுகிறது. இதற்குப்பின்னர்ப் 'பிதாவுக்கும் குமாரனுக்கும் பரிசுத்த ஆவிக்கும் மகிமையுண்டாவதாக, ஆதியிலும், இப்பொழுதும், எப்பொழுதும், சதாகாலங்களிலும் மகிமையுண்டாவதாக' என்று கூறுவதும் மரபாக உள்ளது. இவ்வழக்கம் நான்காம் நூற்றாண்டு முதல் திருச்சபையில் இருந்து வருகின்றது.

இதுபோன்றே திருவிருந்து வழிபாட்டில், 'உலகத்தின் பாவத்தைச் சுமந்து தீர்க்கிற தேவாட்டுக் குட்டியே, எங்களுக்கு இரங்கும்' என்று மூன்று முறை கூறும் பழக்கம் உள்ளது. இப்பழக்கத்தை முதன்முதலில் அறிமுகம் செய்தவர் சைமாக்கஸ் (கி.பி.498-514) என்ற போப் ஆவார். இதுபோன்றே "கர்த்தாவே கிருபையாயிரும்" 'எங்கள் ஜெபத்தைக் கேட்டருளும்', கர்த்தாவே 'எங்கள் இருதயத்தை ஆண்டவரிடத்தில் உயர்த்துகிறோம்' (இதயங்களை ஆண்டவரிடம் எழுப்பியுள்ளோம்) போன்ற தொடர்களும் சபையாரால் சொல்லப்படுகின்றன.

கத்தோலிக்கரின் நற்கருணை மன்றாட்டில் 'இது விசுவாசத்தின் மறைபொருள்' என்று குருவானவர் கூற, அதனைத் தொடர்ந்து சபையார் எழுப்பும் மங்கல ஒலி கூட்டு வழிபாட்டில் குறிப்பிடத்தக்க கூறு ஆகும்.

ஆன்மீக எழுச்சிக் கூட்டங்களில், நாவினை விரைவாக அசைத்து எழுப்பும் ஒலித் தொடரின் பண்புகளை நாட்டுப்புறக்

கதைப்பாடல்களில் காணப்படும் 'குலவை'யோடு பிளாக் ப்ரன் என்பவர் ஒப்பிட்டு நோக்குவதை நிர்மல் செல்வமணி (1999:6) எடுத்துக்காட்டியுள்ளார். இப்பண்பு அருணகிரியாரின் திருப்புகழில் காணப்படுவதையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

பற்றுறுதி வெளிப்பாடாக அமையும் 'அப்போஸ்தலர் விசுவாச பிரமாணம்' அல்லது 'நிசேயா விசுவாச பிரமாணம்' ஆலய வழிபாட்டில் இடம் பெறுகிறது. உலகின் படைப்பு, கிறிஸ்துவின் பிறப்பு, இறைவனின் தன்மை கிறிஸ்துவில் வெளிப்படும் நிலை, கிறிஸ்துவின் மரணம், அதனால் வரும் மீட்பு, உயிருற்றெழல், இரண்டாம் வருகை, திருச்சபை ஞானஸ்நானம், பாவமன்னிப்பு, மறுமைக்குரிய வாழ்வுக்காகக் காத்திருத்தல் போன்றவற்றில் நம்பிக்கை கொண்டிருப்பதை வெளிப்படுத்துவதாக இவை அமைகின்றன. இவை பாடப்படுவதும் உண்டு.

பிழையுணர்தலாக அமையும் பாவ அறிக்கைகள் மௌனமாகவும், வழிபாட்டை நடத்துவோர் சொல்லச் சபையார் அனைவரும் சேர்ந்து சொல்லுவதாயும் அமைகின்றன. தென்னிந்தியத் திருச்சபையின் பழைய வழிபாட்டு நூலொன்றில் எச்.ஏ. கிருட்டினப்பிள்ளையின் தேவாரப் பாணியிலமைந்த பாடலொன்று பாவ அறிக்கையாக இடம் பெற்றுள்ளது.

**சுத்தனோ அல்லன், நன்மை சொல்ல வெட்டுணையுமில்லேன்;**
**பித்தனான் பெரியபாவி பிழைக்குமா றுணரமாட்டேன்;**
**நித்தநீ அருளும் ஈவை நினைக்கிலேன், நன்றியீமை**
**எத்தனை இறைவனேயான் என் செய்வான் தோன்றினேனே.**

ஆயினும் பெந்தகோஸ்தே போன்ற சபைப் பிரிவுகளில், வரையறுக்கப்பட்ட வழிபாட்டு முறைகள் பின்பற்றப்படுவதில்லை.

### மன்றாட்டு

மன்றாட்டு (ஜெபம்) கிறித்தவ வழிபாட்டில் இன்றியமையாத இடத்தினைப் பெறுகிறது. விவிலியத்தில் இடம் பெற்றுள்ள கிறிஸ்து கற்றுக்கொடுத்த மன்றாட்டு 'கர்த்தருடைய ஜெபம்' எனவும் 'பரமண்டல ஜெபம்' எனவும் குறிப்பிடப்படுகிறது. இந்த மன்றாட்டு ஆலய வழிபாடுகளிலும், குடும்ப வழிபாடுகளிலும் தவறாமல் இடம் பெறுகிறது. பொதுவான ஜெபங்கள் ஏறெடுக்கப்பட்ட பிறகு

இறுதியாக இம்மன்றாட்டு இடம் பெறுகிறது. இந்த மன்றாட்டைத் தொடர்ந்து 'ஆத்துமாவே கர்த்தரை ஸ்தோத்தரி. . . (சங்.103:1,2) என்ற துதி வசனமும் இடம்பெறுவது வழக்கமாக இருக்கிறது.

திருச்சபைக்காகவும், உலகிற்காகவும் ஏறெடுக்கப்படும் மன்றாட்டுகள் வழிபாட்டு ஒழுங்கில் காணப்படுகின்றன. வழிபாட்டை நடத்துபவர் சொந்தமாகவும் இம்மன்றாட்டை ஏறெடுக்கலாம். பொதுவாக, மன்றாட்டுகள் கடவுளை விளித்துத் தொடங்கி 'அப்படியே ஆகட்டும்' என்ற பொருளுடைய 'ஆமென்' என்ற சொல்லுடன் முடிவடைகின்றன. 'ஆமென்' என்ற சொல்லை வழிபாட்டில் ஈடுபடும் அனைவரும் சேர்ந்து சொல்லுவர். மன்றாட்டின் இடைப்பகுதி, கடவுளின் துதியாகவும் நன்றி கூறுதலாகவும், தேவைகளுக்கான வேண்டுதலாகவும் அமைகிறது. தமிழ்க் கிறித்தவர்கள் மன்றாட்டைக் கூறும் முறையில், இருவகை நடையியல் போக்குகள் காணப்படுவதையும், மன்றாட்டில் காணப்படும் நீண்ட வாக்கியங்கள், தொடை நயம், மோனை போன்ற கூறுகளையும் எம்.எஸ். திருமலை (1983-107) சுட்டிக்காட்டியுள்ளார்.

அருளுரை

ஆலய வழிபாட்டில் அருளுரை (பிரசங்கம்) இன்றியமையாத இடத்தினை வகிக்கிறது. ஆன்மீகக் கூட்டங்கள், வானொலி, தொலைக்காட்சி நிகழ்ச்சிகள், கிறித்தவ இதழ்கள் ஆகியவற்றிலும் அருளுரைகள் இடம்பெறுகின்றன. விவிலியப் பகுதியொன்றை அடிப்படையாகக் கொண்டு அருளுரைகள் அமைகின்றன. அருளுரையின் அமைப்பையும், நடையையும் அருளுரை ஆற்றுபவரே தீர்மானிக்கிறார். ஆயினும், அருளுரையில் விவிலியத் தமிழ் நடையின் செல்வாக்கைக் காண்கிறோம்.

அருளுரையின் மையப்பொருளையொட்டி, அவ்வப்பொழுது விவிலிய மேற்கோள்களை எடுத்துக்காட்டல், நிகழ்ச்சி அல்லது கதைகளை ஒப்பிட்டுக் கூறல், விளக்குதல், நம்பிக்கையூட்டல், அறிவுறுத்தல் போன்ற மொழிவழிச் செயல்கள் (Illocutionary acts) மீண்டும் மீண்டும் இடம் பெறுகின்றன. அருளுரையின் கருத்தாடல் அமைப்பை ந. இளங்கோவும் (1996) டே. சுதாகர் பிரேம்குமாரும் ஆராய்ந்துள்ளனர்.

டாக்டர் தியோடர் வில்லியம்ஸ் வானொலியில் வழங்கிய 'ஆபிரகாமின் அர்ப்பணம்' எனும் தலைப்பிலமைந்த அருளுரையின் அமைப்பினையும், அதில் இடம்பெற்றுள்ள மொழிவழிச் செயல்களையும் பின்வருமாறு ந. இளங்கோ (1996:189) விவரித்துள்ளார்.

*நிலை 1*

ஆபிரகாமின் அர்ப்பணம்

தொடக்கச் செயல்

வாழ்த்துக்கூறல்

நன்றி கூல்

பொருள் கூறல்

அறிவித்தல்

*நிலை 2*

| துணைச் செயல் - I | துணைச் செயல் - II |
|---|---|
| மேற்கோள் காட்டல் | ஒப்பிடல் + விளக்குதல் |
| மயக்கம் நீக்கல்+தெளிவுபடுத்தல் | காரணம் கூறல் |
| அறிவுறுத்தல் | மேற்கோள் காட்டல்+விவரித்தல் |
| நினைவுறுத்தல் | தெளிவுபடுத்தல் |
| எடுத்துக்காட்டுக் கூறல் | கருத்துக் கூறல் |
| | காரணம் கூறல்+விளைவு கூறல் |
| | மயக்கம் நீக்கல்+அறிவுறுத்தல் |

*நிலை 3*

நிறைவுச் செயல்

தொகுத்தல்

நன்றி கூறல்

வேண்டல்

அருளுரை ஆற்றுவோரையொட்டி, அருளுரை மூன்றுக்கு மேற்பட்ட படிநிலைகளில் அமைவதும், குறிப்பிட்ட சில மொழிவழிச் செயல்கள் மீண்டும் மீண்டும் இடம் பெறுவதும் உண்டு.

### 3.5.2 சதுர்ப் பிரசங்கம்

சமயச் சொற்பொழிவுகள் 'அருளுரை' எனும் உரைவழிப் பனுவலாக மட்டுமல்லாமல், கதாகாலட்சேபம், சதுர்ப் பிரசங்கம் போன்ற வடிவங்களிலும் கிறித்தவத் தமிழில் அமைகின்றன. வேதநாயக சாஸ்திரியார் காலத்தில் தஞ்சையில் சதுர்ப் பிரசங்கம் அடிக்கடி நிகழ்த்தப்பட்டது. சதுர்ப் பிரசங்கத்தில் ஆட்டம், பாட்டம், பேச்சு, குத்து (தாளம்) ஆகிய நான்கு கூறுகுள் இடம் பெறுகின்றன. இதனைக் குழுவாக நிகழ்த்துவர். சதுர்ப் பிரசங்கம் இப்பொழுது நிகழ்த்தப்படுவதில்லை. கதாகாலட் சேபம், வில்லுப்பாட்டு போன்ற வடிவங்களில் இன்று கிறித்தவச் செய்திகள் வழங்கப்படும் நிலை கிறித்தவ விழாக்களில் காணப்படுகிறது.

### 3.5.3 துண்டு வெளியீடுகள்

பொது இடங்களில் வினியோகிக்கப்படும் 'கைப்பிரதிகள்' எனப்படும் துண்டு வெளியீடுகள் பெரும்பாலும் குறிப்பிட்ட கருத்தாடல் அமைப்பைக் கொண்டவை. கையடக்க அளவில் நான்கு பக்க அளவில் வெளியிடப்படும் இவற்றின் முதல் பக்கத்தில் தலைப்பும், கருத்து விளக்கப்படம் ஒன்றும் காணப்படுகிறது. உள் பக்கங்களில் ஒரு நிகழ்ச்சி அல்லது இதனைத் தொடர்ந்து, அந்த நிகழ்ச்சி அல்லது கதை கிறித்தவத்துடன் தொடர்புபடுத்தப்பட்டு, விவிலிய மேற்கோளுடன் விளக்கப்பட்டிருக்கும். இறுதியாகத் தொடர்பு முகவரி கொடுக்கப்பட்டிருக்கும்.

இதுபோன்றே, ஆன்மீகக் கூட்டங்கள் பற்றிய அறிவிப்புகள், சுவரொட்டிகள் போன்றவற்றிலும் கிறித்தவத் தமிழின் அடையாளங்களைக் காணலாம்.

### 3.5.4 பாடல்கள்

கிறித்தவ வழிபாட்டில் ஞானப்பாட்டுகள் (Hymns). கீர்த்தனைகள் (Lyrics), எழுச்சிப்பாடல்கள் (Revival Songs) ஆகியன இடம்பெறுகின்றன.

தமிழ்க் கிறித்தவ வழிபாட்டு முறையில் பாடும் மரபைத் தொடங்கி வைத்தவர் சீகன்பால்கு ஆவார். 1713இல் கிரிண்ட்லர் என்பவரின் துணையுடன் 48 ஞானப்பாடல்களை ஜெர்மன் மொழியிலிருந்து மொழிபெயர்த்துச் சீகன்பால்கு வெளியிட்டார். ரூல்ஸ், பிரெசிரியர், வால்தர் முதலியவர்களால், தொடர்ந்து விரிவாக்கப்பட்டு 1774ல் 'Hymnologia Tamulica' என்ற பெயரில் 307 பாடல்களுடன் வெளியிடப்பட்டது. பின்னர் பெப்ரீஷியஸ், கோர்தேல் முதலியோர் இதனை மேலும் விரிவாக்கி வெளியிட்டனர். 1949இல் கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்ட 410 பாடல்கள் கொண்ட தொகுப்பு தற்பொழுது வழிபாட்டில் பயன்படுத்தப்படுகிறது.

ஜெர்மன் மொழியில் ஓரசைச் சொற்கள் மிகுதி. எனவே ஞானப்பாடல்கள் பெரும்பாலும் அசைச் சீர்களாலேயே ஆக்கப்பட்டுச் சிறிய அடிகளில் செய்யுளாக அமைந்துள்ளன. இதனால் இப்பாடல்கள் விட்டு விட்டு இசைக்கும் இயல்புடையன; ஆர்கனின் ஒத்திசைவுக்கு ஏற்ப அமைந்தவை.

மேனாட்டு ராகங்களில் அமைந்த இப்பாடல்கள் பற்றி டாக்டர் சவரிராயன் ஏசுதாசன், தம் 'ஆசிரமப் பாமாலை' நூலின் முன்னுரையில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

> கிறித்தவக் கோவில்களில், மேல்நாட்டுப் பாடல்களை, இந்திய ராகங்கள் யாப்பிலக்கியப் போக்குகள் முதலியவற்றை அறவே அசட்டை செய்து விகார முறைமையாய் மொழிபெயர்த்துப் பாடும் 'பாமாலைப் பாட்டுகள்' 'சுவிசேஷ கீதங்கள்' என்னும் பல வகைப்பாட்டுகள், பால்யப் பிராய முதல் அவைகளில் பழகிவிட்ட கிறித்தவர்களுக்கு இன்பமாய்ப் போய்விட்டாலும் நமது தேசத்தினருக்குக் கோர சப்தமாகவே தொனிக்கும். நமது தேசத்தில், மெய்யாகக் கிறிஸ்து பகவான் அந்நியரல்லர் சொந்தமானவரே யென்று சாட்சி பகர்வது கிறித்தவர்களின் பிரதான வாஞ்சையென்றால் இப்படிச் செய்வது தகுதியோ? நமக்கு எழுப்புதலாயிருந்து விட்டாலுங்கூட மற்றவர்களுக்கு இடையூறாயிருக்கும் முறைப்படி

செய்வது ஆத்மீக தன்னயமாகி விடுமல்லவோ? நமது ஆராதனைப் போக்குகள் நமது தேசத்தினருக்கு அந்நிய பாஷை போலாகி விட்டதல்லவோ?

வேதநாயக சாஸ்திரியார் தொடங்கிக் கர்நாடக இசையில் அமைந்த கீர்த்தனைகள் கிறித்தவர் வழிபாட்டில் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. இவரைத் தொடர்ந்து நூற்றுக்கும் மேற்பட்ட கிறித்தவக் கவிஞர்கள் கீர்த்தனைகளைப் பாடியுள்ளனர். கிறித்தவக்கவிஞர்கள் தங்கள் காலத்தில் பெருவழக்கிலிருந்த பாடும் மரபையொட்டித் தேவாரப் பண்ணிலும், திருப்புகழ் சந்தத்திலும், தியாகராயர் கீர்த்தனைகளிலும், போர்ச்சுகீசிய, ஆங்கில இசையளவைகளிலும் பாடல்கள் புனைந்துள்ளனர். 'கிறிஸ்தவக் கீர்த்தனை மாலை' ஆசிரியரான ஜே. சாம்ராஜ் 'கிறித்தவப் பாடல்களின் பண்கள், கர்நாடக-மேற்கத்திய இசை மரபுகளின் ஒரு வகைக் கலப்பாக' அமைந்துள்ளதைக் குறிப்பிட்டுள்ளார்.

இம்முறையில் தமிழில் எழுந்த கிறித்தவப் பாடல்களை டாக்டர் தயானந்தன் பிரான்சிஸ் எடுத்துக்காட்டுகிறார் (1987-62,63).

> 'சத்தாய் நிஷ்களமாய்' என்பது தேவார நடையில் இயற்றப் பெற்ற பாடல். 'ஆகமங்கள் புகழ் வேதா' என்னும் பாடல் திருப்புகழ் நடையில் அமைந்துள்ளது. 'சீரேசுபாலன்' என்னும் பாடல் தியாகய்யரின் 'ஸ்ரீ ரகு குலன்' எனும் இராகத்தில் இயற்றப்பட்டுள்ளது. 'கனக சபாபதி தரிசனம்' என்னும் பாடலைக் கேட்ட அளவில் 'எத்தனை திரள் என் பாவம், என் தேவனே' என்னும் பாடல் எழுந்தது. 'சங்கடமே ஜகமே' என்னும் பாடலை வீணையிசையோடு கேட்டதன் பயனாய்த் 'தெய்வன்பின் வெள்ளமே' என்ற பாடல் வெளிப் போந்தது. 'அப்பனே மகனே பாம்பு' என்னும் அரிச்சந்திர நாடகப் பாடலின் இராகத்தில் இயற்றப்பட்டதே 'ஒரு போதும் மறவாத உண்மைப்பிதாவிருக்க' என்னும் பாடல். திருவனந்தபுரம் பத்மநாப ஸ்வாமி கோவிலில் அதிகாலை வேளையில் ஒலித்திட்ட நாதஸ்வர இசையைத் தலைமறைவாக இருந்து கேட்டதன் விளைவாக எழுந்த பாடல்களே, 'இயேசுவே கிருபாசனப்பதியே' 'சுயவதிகாரா, சுந்தரக் குமரா' என்னும் பாடல்கள், தமிழ்க் கிறிஸ்தவர்களிடையே

செல்வாக்குப் பெற்றுள்ள 'தந்தானைத் துதிப்போமே', 'வந்தனம் வந்தனமே' 'வாரும் நாமெல்லாரும் கூடி மகிழ்கொண்டாடுவோம்' 'இராச ராச பிதா' போன்ற பாடல்கள் முழுக்க முழுக்க மேனாட்டு இசையில் அமைக்கப்பட்டவை ஆகும்.

சவரிராயன் ஏசுதாசன், ஆபிரகாம் பண்டிதர், பால்கடம்பவனம், சாலமோன் துரைசாமி, வீ.ப.கா. சுந்தரம், வீ.ப.கா. நடராசன், சத்திய சாட்சி, சா. அமிர்தம், தயானந்தன் பிரான்சிஸ் ஒய்.எம். சாலமோன் போன்றோர் தமிழிசை மரபில் பாடல்கள் அமைய வேண்டியதன் இன்றியமையாமையை வற்புறுத்தி வந்துள்ளனர். புத்தெழுச்சிச் பாடல்கள் செல்வாக்குப் பெற்றுள்ள இன்றையச் சூழலில் கிறித்தவக் கீர்த்தனைகளுக்குப் புத்துயிர் அளிக்கும்பொருட்டுக் கீர்த்தனை விழாக்களும் அண்மையில் தோன்றிவருகின்றன.

### 3.5.5 தமிழ்ப் பண்பாட்டு மரபில் வழிபாட்டு முறை

கிறித்தவ வழிபாட்டு முறைகளில் 'கீர்த்தனைகள்' அறிமுகப்படுத்தப்பட்ட பின்னர், வழிபாட்டைத் தமிழ்ப் பண்பாட்டு மரபிற்கேற்ப அமைக்கும் முயற்சிகள் கிறித்தவர்களால் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இவ்வகையில் தமிழ்வழிக் கோவில்களைக் கிறித்தவர்கள் கட்டியுள்ளனர்.

திருப்பத்தூர் ஆசிரமம், தினபந்துபுரம் ஆசிரமம், கசம் ஆலயம், (வேலூர் பகுதி) சீயோன் மலைக் கோயில் (ஆந்திர எல்லை) முட்டத்தூர் ஆலயம் ஆகிய இடங்களில் சீர்திருத்தப் பிரிவினரின் இந்திய மரபு வழி அமைந்துள்ள ஆலயக் கட்டடங்களைக் காணலாம். 17ஆம் நூற்றாண்டிலேயே டி.நொபிலி இந்திய மரபில் வழிபாட்டிடங்களைக் கட்டியதை இக்னேசியஸ் இருதயம் குறிப்பிட்டுள்ளார். (1977:19) ஐக்கிய ஆலயம், ஈசா ஆலயம் (சென்னை) சச்சிதானந்தா ஆசிரமம், ஜகமாதா ஆலயம் (திருச்சி பகுதி), அன்பு வாழ்வு ஆசிரமம் (பழனி) இன்பவன ஆசிரமம் (குற்றாலம்), திருமலை ஆசிரமம் (குமரிமாவட்டம்) முதலியவை இந்திய மரபில் கத்தோலிக்கர்களால் கட்டப்பட்டுள்ள ஆலயங்களாகும். ஆலயக் 'கருத்தையும், கோபுர அமைப்பையும் சடங்குகள் ஆகியவற்றையும் தவிர்த்து வரும் போக்கைப் பெந்தகொஸ்தே சபையினர் போன்றோரிடம் காணலாம்.

இந்திய மரபுப்படி கட்டப்பட்டுள்ள கோயில்களில் தரையில் அமர்ந்து வழிபடுதல், காவி நிற ஆடை உடுத்துதல், கோயில் சுற்றுதல், சங்கு ஊதுதல் (பொன்னை அணைக்கட்டுக் கோயில்) போன்ற பழக்கங்கள் உள்ளன. வழிபாடுகளில் வீணை, தம்புரா, மத்தளம், தபலா போன்ற இசைக் கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன.

'சாஷ்டாங்கம் செய்ய வாரீர்'

'சென்னிமேல் கரம் தூக்கி நின்றே உன்னை
சேவிக்கும் எளியேனைக் கோபிக்காய் என்றே'

கிறித்தவக் கீர்த்தனைகளில் காணப்படும் மேற்காணும் அடிகள் இந்திய வழிபாட்டு மரபை நினைவூட்டுகின்றன.

தமிழ்ப் பக்தி மரபில் 'அர்ச்சனை' எனும் வடிவம் இடம் பெறவில்லை. அர்ச்சனை குறிப்பிட்ட நேரம், நிகழ்ச்சி ஆகியவற்றோடு தொடர்புடையது. அர்ச்சனையில் குறிப்பிட்ட பக்தன் ஒருவனின் பெயர், நட்சத்திரம் போன்றவற்றைச் சேர்க்க முடியும். அர்ச்சனை தமிழில் இல்லாதிருப்பினும், அர்ச்சனை போன்ற போற்றிப் பாடல்களும், விண்ணப்பங்களும் தமிழில் காணப்படுகின்றன.

வேதநாயகம் சாஸ்திரியாரின் போற்றிப் பாடல்கள் ஜெபமாலையில் (1855) இடம்பெற்றுள்ளன. அருணகிரிநாதரின் திருப்புகழ் சந்தத்திலும் இவர் பாடல்களை எழுதியுள்ளார். எச்.ஏ.கிருட்டினப்பிள்ளை தேவாரப்பண்ணில் எழுதிய 144 பாடல்கள் இரட்சணிய யாத்திரிகத்தில் இடம்பெற்றுள்ளன. அப்பரின் போற்றித் திருத்தாண்டகத்திலுள்ள 108 போற்றிகளைப் பின்பற்றி டாக்டர் தி. தயானந்தன் பிரான்சிஸ் 108 போற்றிகளைப் பாடியுள்ளார். வேதநாயகம் சாஸ்திரியாரின் போற்றிப் பதிகத்தின் ஒரு பகுதி கீழே தரப்படுகிறது.

காயமதைந்துங் கருதாய் போற்றி
கவலைகள் மூன்றுங் கெடவிடு போற்றி
கதிப்பதம் நான்கும் பெறவருள் போற்றி
யெண்ணி வெண்ண முடிப்பாய் போற்றி
என்பவம் யாவும் பொறுப்பாய் போற்றி
யெனை மீண்டவனே யெனை ஆண்டவனே
யேசுநாதா போற்றி! போற்றி!

## தமிழிசை வழிபாடு

தமிழிசை வழிபாடு குத்துவிளக்கு ஏற்றுதலோடு தொடங்குகிறது. இறைவாழ்த்து அருள் வேண்டல், பாவ அறிக்கை, பற்றுறுதி அறிக்கை, மன்றாட்டு, இறையாசி போன்றவை யாவும் தமிழிசை மரபில் அமைந்துள்ளன. மதுரை அரசரடி இறையியல் கல்லூரியில் பயன்படுத்தப்படும் இந்திய முறை தமிழிசை வழிபாடொன்றில் மும்மை வாழ்த்து பின்வருமாறு அமைந்துள்ளது.

மும்மை வாழ்த்து

நடத்துபவர் : முழுமுதற் கடவுளாம் முதல்வா. . .

சபையினர் : போற்றி

நடத்துபவர் : பூமியில் வந்தெமை புரந்தவா

சபையினர் : போற்றி போற்றி

நடத்துபவர் : ஆவியாய் அகத்துறைந் தாள்பவா

சபையினர் : போற்றி போற்றி போற்றி

நடத்துபவர் : திரியேக தேவநாம சங்கீர்த்தனம்

யாவரும் : தேவா தேவா.

இந்தியத் தமிழ்ப் பண்பாட்டு மரபிற்கேற்ப வழிபாட்டு முறைகளை அமைக்கும் முயற்சி கிறித்தவர்களால் மேற்கொள்ளப் பட்டிருப்பினும் இவை பரவலாகப் பயன்படுத்தப்படுவதில்லை. இந்தியப் பாணியிலமைந்த கிறித்தவக் கோயில்களிலும் திருச்சபை விழாக்களிலும், சில சிறப்பு வழிபாடுகளிலும் மட்டுமே தமிழிசை வழிபாடுகள் நடைபெறுகின்றன. டாக்டர் தி. தயானந்தன் பிரான்சிஸ் (1990:33) குறிப்பிடுவது போல, நம்நாட்டில் பண்பாடு சார்ந்த இறையியல் உருவாகிட வேண்டும். நமது சமுதாய வரலாறு, சமயத்தெளிவு, சிந்தனைப்போக்கு ஆகியவற்றைத் தழுவியே கிறித்தவ இறையியல் இங்கு உருவாகிட வேண்டும் என்ற விழைவைத் தமிழ்க் கிறித்தவ அறிஞர்களிடையே காணுகிறோம். ஆயினும் நடைமுறையில் இப்போக்கு தமிழ்க் கிறித்தவர்களால் மேற்கொள்ளப்படவில்லை.

இயல் 4

# கிறித்தவத் தமிழ் : இன்றைய நிலை

அன்றிக்ஸ் அடிகளின் 'தம்பிரான் வணக்கம்' வெளியான 1557 ஆம் ஆண்டு தொடங்கி, அண்மையில் 'திருவிவிலியம்' வெளிவந்துள்ள 1995ஆம் ஆண்டு வரையிலான காலப்பகுதி கிறித்தவத் தமிழுக்கான ஆதாரக் களமாக விளங்குகிறது. இக்காலப் பகுதியில் நிலவிய அரசியல், சமூக தொழில்நுட்பக் காரணிகள் தமிழ் உரைநடை வளர்ச்சியிலும் மொழிபற்றிய மனப்பாங்கிலும் ஏற்படுத்தியுள்ள மாற்றங்கள் எண்ணற்றவை. தமிழில் காலந்தோறும் ஏற்பட்டு வந்துள்ள மாற்றங்களுக்கேற்பக் கிறித்தவத் தமிழிலும் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. தமிழில் ஏற்பட்ட மாற்றங்களுக்குக் கிறித்தவப் படைப்புகளுக்கும் குறிப்பிடத்தக்க பங்கு உண்டு.

பண்டிதர் நடைக்கும் பாமரர் நடைக்கும் இடைப்பட்ட ஒரு பொது நடையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டது, பேச்சு வழக்கைச் சீர்மைப்படுத்தி எழுதும் தமிழாகச் சீரமைத்தது, பொதுமக்களும் புரிந்துகொள்ளத் தக்கதாகத் தமிழ் உரைநடையை எளிமைப்படுத்தி ஜனநாயகப்படுத்தியது, சமகாலச் சமய மரபுகளைத் தழுவிச் சமயஞ்சார்ந்த கலைச்சொற்களைச் சமஸ்கிருத மொழியில் ஆக்கிக் கொண்டது, விவிலிய மொழிபெயர்ப்பின்போது நேர்ந்த மூல மொழியின் செல்வாக்குப் போன்றவற்றைக் கிறித்தவத் தமிழின் தொடக்க காலப் பண்புகளாகக் கொள்ளலாம். இப்பண்புக் கூறுகளின் செல்வாக்கை இன்றும் கிறித்தவத் தமிழில் காண்கிறோம்.

1950இல் வெளியிடப்பட்ட யாழ்ப்பாண மொழிபெயர்ப்பைத் தொடர்ந்து, சமஸ்கிருதச் சொற்களை மிகுதியாகப் பயன்படுத்துவதற்கு எதிர்ப்புணர்வு ஏற்பட்ட போதிலும், அது கிறித்தவத் தமிழில் பெரிய மாற்றங்களை ஏற்படுத்தவில்லை. பெப்ரீஷியஸ், பவர் ஆகியோரது விவிலிய மொழிபெயர்ப்புகளைத் தழுவி, 19ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் 'கிறித்தவத் தமிழ்'

நிலைபெறுவதையும் காண்கிறோம். திருத்தமுறைக் கிறித்தவர்களைப் பொறுத்தவரை, பவர்மொழிபெயர்ப்பின் செல்வாக்கைக் கிறித்தவ வழிபாடுகள், அருளுரைகள், துண்டு வெளியீடுகள் போன்றவற்றில் தெளிவாகக் காணமுடிகிறது.

ஒரு மொழிநடையின் மீது பாதுகாப்புணர்வும், வழிபாட்டுணர்வும் தோன்றும்போது, ஓர் இலக்கணம் விதிமுறைப் பண்புகளை (Prescriptive) ஏற்கிறது. பவர் மொழிபெயர்ப்பு நடையின் மீது கிறித்தவர்களுக்கு ஏற்பட்ட இத்தகைய ஈடுபாட்டுணர்வு 'கிறித்தவத் தமிழ்' உருக்கொள்வதற்குக் காரணமாக அமைந்தது.

கிறித்தவம், விவிலியம் சார்ந்த சமயமாக (The Book based religion) இருப்பதாலும், கூட்டு வழிபாட்டுக்கு முக்கியத்துவம் தருவதாலும், சிறுவயதுமுதலே வழிபாடுகளில் பங்கேற்கும் கிறித்தவர் அனைவரும் பழக்கம் காரணமாகவும், கிறித்தவத் தமிழ் நடையைத் தன்னியலாக உள்வாங்கியுள்ளனர். இந்த நடைமயிலிருந்து சற்றே மாறுபட்டாலும் அதை 'வேதப்புரட்டு' என்று கருதும் மனப்போக்கும் இடைக்காலத்தில நிலவியது. இன்றும் கூடக் கிறித்தவர் சிலரிடையே இந்த மனநிலை நிலவுகிறது.

தமிழ் விவிலிய மொழிபெயர்ப்பு வரலாற்றில், ஒன்றுக்கு மேற்பட்ட மொழிநடைப் போக்குகள் சமகாலத்தில் காணப்படும் நிலையையும் காண்கிறோம். சொல்வழி மொழிபெயர்ப்பைத் தவிர்த்துக் கருத்து மொழிபெயர்ப்புக்கு முதன்மை தந்த இரேனியஸ், தனித்தமிழ் ஈடுபாடு கொண்ட அருள் தங்கையா போன்றோரைத் தமிழ்விவிலிய மொழிபெயர்ப்பு வரலாற்றில் காண்கிறோம். மூல மொழியின் கருத்துப் படிமங்களையும், பவர் மொழிபெயர்ப்பில் ஆங்காங்குக் காணப்படும் ஆங்கில மொழியின் சாயலையும், சமஸ்கிருதச் சொற்களையும் நீக்க வேண்டியதில்லை என வாதாடியவர்களையும் விவிலிய மொழிபெயர்ப்பு வரலாற்றில் காண்கிறோம். இதனால் கிறித்தவத் தமிழ் நடை கிறித்தவரிடையே தொடர்ந்து செல்வாக்குப் பெற்று வந்துள்ளதையும் காண்கிறோம்.

ஆயினும் கிறித்தவர்களின் செய்யுள் படைப்புகளில் கிறித்தவத் தமிழின் சாயலைக் காண்பது அரிது. வீரமாமுனிவர்

தொடங்கிக் கிறித்தவர்கள் காப்பியங்களையும், சதகம், பதிகம், மாலை, பள்ளு, குறவஞ்சி, அந்தாதி, பிள்ளைத்தமிழ் போன்ற சிற்றிலக்கிய வடிவங்களையும், அம்மானை, கும்மி, சிந்து முதலிய நாட்டுப்புற இலக்கிய வடிவங்களிலும் கிறித்தவ இலக்கியங்களைப் படைத்துள்ளனர். இவை தமிழ்ச்செய்யுள் மரபைத் தழுவி அமைந்துள்ளன. இவை தமிழ்ச்செய்யுள் மரபைத் தழுவி அமைந்துள்ளன. செய்யுள் படைப்புகள் போன்றே (கிறித்தவப் பொருண்மை கொண்ட) புதினங்கள், சிறுகதைகள், கவிதைகள், வாழ்க்கை வரலாறு போன்ற நவீன உரைநடை இலக்கிய வடிவங்களிலும் கிறித்தவத் தமிழின் சாயலைக் காண்பது மிக அரிது. சமயஞ்சார்ந்த உரைநடைப் படைப்புகளிலும் கருத்தாடல்களிலுமே கிறித்தவத் தமிழின் கூறுகளைத் தெளிவாகக் காணமுடிகிறது. கிறித்தவத் தமிழ் இதழ்கள், வானொலி, தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் பலவற்றிலும் கிறித்தவத் தமிழின் செல்வாக்கையே காணுகிறோம்.

திராவிட இயக்கங்களின் பின்னணியில் தமிழ்நடையில் ஏற்பட்ட புதிய போக்குகளையொட்டி, கிறித்தவப் பனுவல்களைத் தற்காலத் தமிழ் நடையில் படைக்கும் முனைப்பும் விழைவும் தமிழ்க்கிறித்தவரிடையே எழுந்தன. தற்காலத் தமிழ்நடையில் விவிலிய மொழிபெயர்ப்பு அமைய வேண்டியதன் இன்றியமையாமையைப் பேரா. வீ.ப.கா. சுந்தரம் பின்வருமாறு பாடியுள்ளார்.

புதிய தூய மறைஅமுதைப்
புனித இனிய மொழிநடையில்
பதியச் சொல்லல் பண்பாகும்
• பரவச் செய்தல் பணியாகும்.

கத்தோலிக்க சபையின் சார்பில் வெளிவந்த தமிழக ஆயர் குழுவின் மொழிபெயர்ப்பும் )1970-73) இந்திய வேதாகமச் சங்கத்தின் சார்பில் வெளிவந்த தே. இராஜரீகத்தின் மொழிபெயர்ப்பும் (1979), இவற்றைத் தொடர்ந்து அண்மையில் வெளிவந்தள்ள திருவிவிலியம் (பொது மொழிபெயர்ப்பு 1995) கிறித்தவத் தமிழ்நடையைத் தவிர்த்துள்ளன. இவை தற்காலத் தமிழ் நடையில் அமைந்துள்ளன. மேலும் பொது மொழிபெயர்ப்பில் காணப்படும் மற்றொரு குறிப்பிடத்தக்க பண்பு, மொழி பண்பாட்டு

மரபுகளில் காணப்படும் ஆணாதிக்கக் கூறுகளை நீக்கியுள்ளதாகும். இரு பாலருக்கும் பொருந்தும் முறையில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. இம்மொழிபெயர்ப்பு குறித்து பேரா.பொ. ஆ. சத்தியசாட்சி பின்வருமாறு குறிப்பிடுகிறார் ('தரு' **1996** இளவேனில்).

> "இத் திருவிவிலியம் தமிழ்ச்சபையானது இருபத்தோராவது நூற்றாண்டின் நுழைவாயிலில் நின்றுகொண்டு தமிழ்மக்களுக்கு வழங்குகின்ற ஒப்பற்ற இலக்கியப் பேழை, ஆன்மீக அருட்கொடை, கடவுளின் உயர்தனிச் செந்தமிழ்ச் சித்திரம். இந்தப் புதிய மொழிபெயர்ப்பு 'கிறித்தவத் தமிழ்' என்றிருந்த இழிமொழியைத் தூக்கி வங்கக் கடலில் எறிந்துவிட்டது. இது ஈபுரு மொழியிலிருந்தோ கிரேக்க மொழியிலிருந்தோ மொழிபெயர்ப்புச் செய்யப்பட்ட ஒரு நூலாகத் தோன்றவில்லை. தமிழ் மண்ணில் முளைத்தெழுந்த ஒரு முதல்நூல் போலவே திகழ்கிறது"

மொழிபெயர்ப்புச் சிக்கல்களையொட்டித் திருவிவிலியத்திலும், ஆங்கில மொழிபெயர்ப்புகளின் தாக்கம் ஓரிரு இடங்களில் காணப்படுவதைச் சுட்டிக்காட்டும் பேரா. பொ.ஆ. சத்தியசாட்சி, இதனைப் 'புதிய கிறித்தவத் தமிழ்' எனக் குறிப்பிட்டுள்ளார்.

புதிய மொழிபெயர்ப்பைப் பொதுவாகப் பலரும் பாராட்டி வரவேற்று வந்துள்ளனர். ஆயினும், திருச்சபை மக்களிடையே இம்மொழிபெயர்ப்பு இன்னும் பரவலாகப் பயன்படுத்தப்படவில்லை; சீர்திருத்த சபையின் வழிபாடுகளிலும் இடம்பெறவில்லை. அதற்கான முயற்சி எதுவும் திருச்சபையில் அமைப்புரீதியாக மேற்கொள்ளப்படவில்லை. கத்தோலிக்க வழிபாடுகளில் புதிய மொழிபெயர்ப்பின் பயன்பாட்டைக் காண்கிறோம். கத்தோலிக்கச் சபையினர் வெளியிட்டுள்ள வழிபாட்டு முறைகள் அடங்கிய 'திருப்பலிப் புத்தகம்' இனிய தற்காலத் தமிழ்நடையில் அமைந்துள்ளது. கிறித்தவக் கருத்தாடலில் காணப்படும் மன்றாட்டு, பற்றுறுதி அறிக்கை, பாவ அறிக்கை முதலிய வழிபாட்டுப் பனுவல்களின் மொழிநடையைத் தீர்மானிப்பதில் தமிழ் விவிலிய மொழிநடைக்குக் குறிப்பிடத்தக்க பங்கு உண்டு. இந்த வகையில், புதிய மொழிபெயர்ப்பு பரவலாகப் பயன்படுத்தப்படும் பொழுது, வழக்கிலுள்ள கிறித்தவத் தமிழின் செல்வாக்கு குறையலாம்.

குறிப்பிட்ட திருச்சபையின் அமைப்பு சாராது, தனிப்பட்ட முறையில் அருட்பணியாற்றும் டி.ஜி.எஸ். தினகரன், மோகன் சி. லாசரஸ், பெர்க்மான்ஸ் போன்ற சமயச் சொற்பொழிவாளர்களின் பேச்சில் கிறித்தவத் தமிழ்ப் பண்புகளோடு, அவர்தம் தனிப்பட்ட நடையியல் பண்புகளும் காணப்படுகின்றன. சொற்களுக்கு அழுத்தம் கொடுத்தல், அடுக்கியுரைத்தல், 'சொல்லும்படிக்காய்', 'உங்களோடே கூட' போன்ற தொடர்களில் உள்ள படிக்காய், கூட போன்ற துணை வினை, விகுதிகளைப் பிரித்து ஒலித்தல், மெய்ப்பாடுகளோடு கூடிய மிகை உணர்ச்சி வெளிப்பாடு போன்றவற்றைத் தனிப்பட்டவரின் நடையியல் பண்பாகவே கொள்ள இயலும்.

கிறித்தவத் தமிழில் காணப்படும் ஓசை இயல்புகளை (prosodic features) விரிவாக ஆராய இயலும். இவ்வகையில், அழுத்தம் (stress) சுரம் (pitch) குரலிசை (intonation) விட்டிசை (juncture) போன்ற பண்புகள் கிறித்தவத் தமிழில் இடம் பெறும் பாங்கினை ஆராயலாம்.

இந்தியச் சமய மரபில் அமைந்த கிறித்தவக்கோயில்களில் நிகழும் தமிழிசை வழிபாடுகள் போல, ஆங்காங்கே தனிப்பட்டவராலும், திருச்சபையினராலும் சோதனை ரீதியாகத் தமிழிசை வழிபாடுகளும், இலக்கிய நடையிலமைந்த அருளுரைகளும் நிகழ்த்தப்பட்டு வருகின்றன. அருளுரைகளில் தமிழ் இலக்கியங்களை மேற்கோள் காட்டும் போக்கும், இதன் உச்சக் கட்டமமாகத் தொல்காப்பியத்தில் காணப்படும் கொடிநிலை, கந்தழி, வள்ளி போன்ற கலைச்சொற்களைக் கிறித்தவப் பொருண்மையில் ஆளும் போக்கும் ('தரு' வேனில் 1996) கிறித்தவக் கருத்தாடல்களில் இடம்பெறுகிறதெனினும், இவற்றைத் தனிப்பட்ட கிறித்தவர்களின் முயற்சியாகவே கொள்ள வேண்டியுள்ளது.

பொதுவாக நோக்கும்போது, தற்காலக் கிறித்தவரிடையே குறிப்பாகத் திருத்தமுறைக் கிறித்தவர்களின் வழிபாட்டிலும், பிற கருத்தாடல் சூழல்களிலும் கிறித்தவத் தமிழின் செல்வாக்கையே மிகுதியும் காண்கிறோம்.

## துணை நூற்பட்டியல்


1. அப்துல் கரீம், மு. 1985 (மறுபதிப்பு) இஸ்லாமும் தமிழும், கழக வெளியீடு, சென்னை - 108

2. இராசமாணிக்கம், ச (ப.ஆ.), 1963 வணக்கம், தமிழ் இலக்கியக் கழகம், தூத்துக்குடி

3. - - - - - - - - - - - - - - - , 1965 தர்ம நடக்கை, தமிழ் இலக்கியக் கழகம், தூத்துக்குடி

4. - - - - - - - - - - - - - - - , 1967 ஆத்தும நிர்ணயம், தமிழ் இலக்கியக் கழகம், தூத்துக்குடி

5. இளங்கோ, ந. 1996 கருத்தாடல் ஆய்வு, 976, டி.வி.எஸ். குடியிருப்பு, சென்னை-101

6. இன்னாசி, சூ. 1980 கிழக்கே மறைந்த கதிரவன், ஜெயகுமாரி ஸ்டோர்ஸ், நாகர்கோயில்-1

7. - - - - - - - - - - - - - - - , 1989 வீரமாமுனிவம் சில ஆய்வுகள், மாதா பதிப்பகம், சென்னை-92

8. - - - - - - - - - - - - - - - , 1990 கிறித்தவமும் தமிழகமும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113

9. - - - - - - - - - - - - - - - , 1995 வீரமாமுனிவர், சாகித்திய அகாதமி, புதுதில்லி-1

10. எரோணிமுசு, கு. 1995 பொது விவிலியம் : ஓர் அறிமுகம் அருள் வாக்கு மன்றம், தூய பவுல் இறையியல் கல்லூரி, திருச்சி-1

11. கிருஷ்ணன், ப. 1984 தமிழ் நூல்களில் தமிழ் மொழி, இனம், தமிழ்நாடு, சென்னை

12. கிருட்டினபிள்ளை, எச்.ஏ. 1956 (II பதி.) இரக்ஷணிய சமய நிர்ணயம், தூத்துக்குடி

13. சக்திவேல், சு. 1987 நூற்றாண்டுத் தமிழ் உரைநடை, மணிவாசகர் பதிப்பகம், சென்னை

14. சண்முகதாஸ், அ. 1989 (II பதி.) தமிழ் மொழி இலக்கண இயல்புகள், முத்தமிழ் வெளியீட்டுக் கழகம், யாழ்ப்பாணம்

15. சண்முகம், செ.வை. 1993 கிறித்தவ அறிஞர்களின் இலக்கணப்பணி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113

16. சத்தியசாட்சி, பொ.ஆ. 1975 தஞ்சை வேதநாயகர் தமிழ் விருந்து, கிறிஸ்தவக் கலை - தொடர்பு நிலையம், சென்னை-18

17. சபாபதி குலேந்திரன், 1967 கிறிஸ்தவ வேதாகமத்தின் வரலாறு, இந்திய வேதாகமச் சங்கம், பெங்களூர்

18. சம்பந்தன், மா.சு. 1980 அச்சும் பதிப்பும், தமிழ்ப் பதிப்பகம், சென்னை

19. சவரிராயன் ஏசுதாசன், 1977 (ப.ஆ) (X பதி.) ஆசிரமப் பாமாலை, கிறிஸ்து குல ஆசிரமம், திருப்பத்தூர்

20. சரோஜினி பாக்கியமுத்து, 1990 விவிலியமும் தமிழும், குருக்குல் இறையியல் கல்லூரி, சென்னை-10

21. சாந்த குமார், செ. 1991 தென்னிந்திய திருச்சபை வேலூர் பேராயத்தின் கிறித்தவத் தமிழ்ப்பணிகள், கிறித்தவ இலக்கிய நிலையம், வேலூர்-1

22. சாமி, அ.மா. 1997 தமிழ்க் கிறிஸ்தவ இதழ்கள் ஓர் ஆய்வு, நவமணி பதிப்பகம், சென்னை-14

23. சுதாகர் பிரேம்குமார்,டே.1997 'கிறித்தவக் கருத்தாடல் எம்.ஏ. ஆய்வேடு, தமிழ்த்துறை, சென்னைக் கிறித்தவக் கல்லூரி சென்னை-59

24. சுந்தரம், வீ.ப.கா. 1982 தமிழும் இசையும், தமிழ்நாடு இறையியல் கல்லூரி, மதுரை-10

25. செல்வ நாயகம், வி. 1957 தமிழ் உரைநடை வரலாறு, இலங்கைப் பல்கலைக்கழகம், பேராதனை

26. சேம் வேதநாயகம் 1974 (பதி.ஆ.) ஜெபமாலை, தஞ்சாவூர்

27. சோசபு சுந்தரராசு 1977 'பரமார்த்த குருவின் கதை - வீரமாமுனிவரின் முன்னுரை' 5-வது கருத்தரங்கு ஆய்வுக் கோவை, அண்ணாமலைநகர்

28. ஞான இராபின்சன் 1985 தமிழ்க்கிறித்தவ மரபு, தமிழ்நாடு இறையியல் கல்லூரி, மதுரை-10

29. டேனியல், அ. 1989 வேதாகமத் தமிழ் மொழி பெயர்ப்பில் லூத்தரன் சபையாரின் பங்கு, ஆற்காடு லூத்தரன் சபை வெளியீடு, கடலூர்

30. டேவிட்பிரபாகர், ப. 1990 (பதி.ஆ) தமிழர் எதிர்காலவியல், சென்னைக் கிறித்தவக் கல்லூரி, சென்னை-59

31. - - - - - - - - - - - - - - ,& ஷீபா பிரபாகர் 1996 கிறித்தவக் கீர்த்தனைச் சொற்களஞ்சியம், கிரேஸ் வெளியீட்டகம், செஞ்சி

32. - - - - - - - - - - - - - - - , 1996 'தமிழ் விவிலிய மொழிபெயர்ப்பும் மொழிநோக்கும்' 'தரு' பனி இதழ்.

33. - - - - - - - - - - - - - - - ,& 1997 'கிறித்தவத் தமிழ்' 'தரு' மழை இதழ்
மோசசு மைக்கல் பாரடே

34. - - - - - - - - - - - - - - - , 1998 'பெத்லகேம் குறவஞ்சியின் இலக்கியக் கொள்கைகள்' 'தரு' 3:2

35. தயானந்தன் பிரான்சிஸ், தி 1984 கிறித்தவ அருட்கவிஞர்கள், கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், சென்னை-3

36. - - - - - - - - - - - - - - - , 1987 கிறிஸ்து நெறிப் பார்வைகள் கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை-3

37. - - - - - - - - - - - - - - - , 1990 திருச்சபை தெருச்சபையாக வேண்டும், கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், சென்னை-3

38. தாவீது அதிசயநாதன், எஸ். 1983 (தொ.ஆ) உலக வரலாற்றில் கிறித்தவம், உலகக் கிறித்தவத் தமிழ்ப் பேரவை, சென்னை

39. நுஃமான், எம்.ஏ. 1988 'பத்தொன்பதாம் நூற்றாண்டின் நவீன உரைநடை இயக்கமும், ஆறுமுகநாவலரும்' 'மொழியியல்' (11:1-4)

40. பண்டாரம் நம்பியார், ஈ. 1970 தமிழ் வளர்த்த தைரியநாதர், ஜெயகுமாரி ஸ்டோர்ஸ், நாகர்கோவில்

41. பரமசிவானந்தம், அ.மு. 1966 பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழ் உரைநடை வளர்ச்சி, தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கம், சென்னை

42. மோசசு மைக்கேல் பாரடே 1986 'அருளுரை நடுவே அருந்தமிழ் இலக்கியம்' உலகக் கிறித்தவத் தமிழ்ப் பேரவை மூன்றாவது மாநாட்டு மலர், சென்னை

43. - - - - - - - - - - - - - - -, 1998 சிலுவை வழிச் சிந்தனைகள், கிருபா பதிப்பகம், சென்னை-73

44. வேங்கடசாமி, சீனி. 1980 (மறுபதிப்பு) கிறித்தவமும் தமிழும், கழக வெளியீடு, சென்னை-1

45. ஜெபநேசன், எஸ். 1983 அமெரிக்கன் மிஷனும் இலங்கையில் தமிழ் வளர்ச்சியும், யாழ்ப்பாணக் கல்லூரி, வட்டுக்கோட்டை

46. - - - - - - - - - - - - - - -, 1996 'யாழ்ப்பாண தமிழ் வளர்ச்சியில் கிறித்தவ அருட்தொண்டர்களின் பங்கு' 'தரு' பனிஇதழ்


## இதழ்கள்


'இறையியல் மலர்' (மதுரை இறையியல் கல்லூரி-காலாண்டிதழ்)
1:5(1971) 1:6(1972) 16:4(1985)

'தரு' (உலகக் கிறித்தவத் தமிழ்ப் பேரவை - காலாண்டிதழ்)
1996 முதல் 1998 வரை வெளியான இதழ்கள்


### மற்றும்

தமிழ் விவிலிய மொழிபெயர்ப்புகள், வழிபாட்டுநூல்கள்


1. Arden. A.H. 1910 **Progressive grammar of common Tamil**, SPCK, Chennai-7

2. David Prabhakar, P. 1987 **'A Comparative Study of two Bible Translations in Tamil'**, M.A. Dissertation, Dept. of Linguistics, Annamalai University

3. ---------------, 1988 **Bible Taranslations in Tamil**, 20th AYVUKKOVAI, Vol. II, Annamalai Nagar

4. Dayanandhan Francis,T. 1978 **Christian poets and Tamil culture,** University of Madras

5. Gnana Seelan Muthuraj,J.1986 **A Bibliography of Christian writing in Tamil in the libraries of UK and Europe,** Tamil Nadu Theological Seminary, Madurai-10

6. Ignatius Hirudayam 1977 **Christianity & Tamil Culture,** University of Madras

7. John Lazarus 1878 **Tamil Grammar,** Addition&Co, Madras

8. Joseph Beschi 1992 (reprint) **A Grammar of the Common dialect of Tamil Language,** AES, New Delhi-16

9. Meenakshi Sundaram,K. 1974 **The Contribution of European Scholars of Tamil,** University of Madras

10. Murugasa Mudaliyar, N. 1976 **Tamil Prose Style in Theological Writing,** Journal of Tamil Studies

11. Nirmal Selvamony 1999 'Tamil Christian Hymn: A post Colonial critique' **On Translation,** IITS, Chennai-113

12. Rajarigam, D. 1958 **The History of Tamil Christian literature,** CLS, Chennai-3

13. Sapabathy Kulendran 1958 'The tentative version of the Bible', **Tamil Culture** Vol.VII:3

14. Thirumalai, M.S. 1983 **Aspects of language use,** All India Tamil linguistics Association, Annamalai Nagar

15. Xavier S.Thaninayagam, 1958 'The First books printed in Tamil' **'Tamil Culture'** Vol.VII:3

# சிறப்புப் பெயரகராதி

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113
## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள் | 55.00 |
| பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் தொகுதி-2 | 80.00 |
| தாய்நாட்டிலும் மேலை நாடுகளிலும் தமிழியல் ஆய்வு | 75.00 |
| ஜப்பானியக் காதல் பாடல்கள் | 75.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| பயிலரங்கக் கவிதைகள் | 18.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-2 | 64.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-1 | 56.00 |
| இராமாயணம் - தோற்பாவை நிழற்கூத்து | 125.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-4 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-3 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-2 | 110.00 |
| எட்டையபுரப் பள்ளு | 60.00 |
| திருக்குறள் பூரணலிங்கம்பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்பு | 100.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் தொகுதி-2 | 65.00 |
| ON TRANSLATING TIRUKKURAL | 50.00 |
| ஐங்குறுநூறு மூலமும் உரையும் | 85.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| செந்தமிழ் அகராதி | 150.00 |
| சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி | 200.00 |
| THIRUVACHAGAM | 175.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| பொருள் புதிது | 35.00 |
| ஆளும் தமிழ் | 28.00 |
| தமிழர் கொடிகள் | 30.00 |
| தமிழர் சமூகவியல் | 35.00 |
| THE NARRINAI FOUR HUNDRED | 175.00 |
| தமிழில் ஆவணங்கள் | 75.00 |
| தமிழ் மேடை நாடக வரலாறு | 55.00 |
| பரதநாட்டிய சாஸ்திரம் | 150.00 |
| தமிழ் கற்பித்தலில் உன்னதம் | 20.00 |
| மேலை நோக்கில் தமிழ்க்கவிதை | 100.00 |
| SOUND CORRESPONDENCES BETWEEN TAMIL & JAPANESE | 35.00 |
| அயலகத் தமிழ்க்கலை, இலக்கியம், சமகாலச் செல்நெறிகள் | 125.00 |
| TAMIL LITERATURE AND INDIAN PHILOSOPHY | 200.00 |
| சதகத்திரட்டு தொகுதி-1 | 80.00 |
| தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள் | 70.00 |
| சங்கத்தமிழ் உறவுமுறைச் சொற்கள் | 45.00 |
| அறிவானந்த அடிகள் இயற்றிய சிறுத்தொண்டர் நாடகம் | 80.00 |

Pub.No. 421 **கிறித்தவத் தமிழ்** **20.00**